# அறிவியல் கண்ணோட்டத்தில் ஆன்மிகம்








# தேடல்கள்

நடராஜன் நாகரெத்தினம்







என் அருமை மகனுக்கு

# Publishing information

First published: 2013

E-Publication.

Title: Thedalgal.

(Spirituality)

Author: Natarajan Nagaretinam

Pages 154

Font size: 14 Pts.

Communication: natarajan.naga@gmail.com

080312

# விஞ்ஞானக் கண்ணோட்டத்தில்

# ஆன்மிகம்

## அத்தியாயம் 01

## தேடல்கள்

1.0 இந்த புத்தகம் … ஏன்? யாருக்காக?

1.1 எச்சரிக்கைகள் (அனைவருக்கும்)

1.2 எச்சரிக்கை (வாசகர்களுக்கு)

1.3 எச்சரிக்கை (போலி சாமியார்களுக்கு)

1.4 எச்சரிக்கை (நல்ல நண்பர்கள், சொந்த பந்தங்களுக்கு)

## அத்தியாயம் 02

## குழப்பலோ குழப்பல்

2.1 ஆத்திகமும் - ஆன்மிகமும்,

2.2 மதங்கள், கடவுள் அழிவுகள்.

2.3 முடிவாக

## அத்தியாயம் 03

## சாமியார்கள் உருவாவது எப்படி?

3.1 அறிமுகம்

3.2. சாமியார்கள் உருவாகிறார்கள்.

3.3. சாதாரண மனிதரே மகானாக மாறுகிறார்.

3.4. கதை - 01; ஜாடிக் - ஒரு சிறுகதை.

3.5. ஜாடிக் கதையிலிருந்து அறிந்து கொள்வது

3.6. போலிகள் வேண்டாம்.

## அத்தியாயம் 04

## சில சாமியார்கள் உருவான கதைகள்

# அத்தியாயம் 05.

# ஞானிகளைப் புரிந்து கொள்வோம்

5.1. ஞானிகள் என்னவெல்லாம் செய்வார்கள்?

5.2. மன்னர்களை நல் வழிக்கு கொண்டு **வருவது.**

## கதை-03

## சுல்தானுக்குத் தலைவணங்காத துறவி

5.3 அறிவைத் தேடி தன்னை அணுகியவர்கள்

கதை 04 சாமுராய்.

5.4. துறவிகளின் பரந்த அறிவு, வென்றிட உதவும் .

கதை 05 ஒரு ஜென் குருவும், திமிர் பிடித்த அரசனும்

5.5. ஞானிகளின் வினோதமான  செயல்களில்

கதை 06 ஸுஜுகி ரோஷி;

5.6. ஞானிகளுக்கு நகேச்சுவை உணர்வு இருக்காதா?

5.7.கோப்பைக்குள் ஒரு பாடம்

கதை 06,  நமது சிறிய பிரச்சினைகள்

5.9. துறவிகள் எல்லோருமே ஞானிகளில்லை.

கதை 07. விரலை நறுக்கிய புத்த துறவி

5.10. துறவியின் பொறுமை அன்பின் எல்லைகள்

கதை 08.

வீண்பழி ஏற்ற புத்த துறவி

5.11 கதை 09. கழுதையில் அறிவை கண்ட ஸுபி துறவி;

5.12. சரித்திரத்தில் இப்படிப்பட்ட துறவிகள் பலரைக் காணலாம்.

கதை 10. புத்தகம் திருடிய துறவி

5.13 ஸுபி ஞானிகள்

# அத்தியாயம் 06

# அறிவும் - மக்களில் நான்கு பிரிவுகளும்.

6.1. ஹரித்வாரில் ஒரு சாது

6.2. கேட்காத கேள்விக்குக் கிடைத்த பதில்.

6.3 ஞானிகள் அறிவதென்ன?

6.4 ஒரு ஜென் கவிதை

# அத்தியாயம் 1

# ஆன்மிகம் என்றால் என்ன?



ஆன்மிகம் என்றால் என்ன என்ற கேள்விக்கு ஒவ்வொருவரும் ஒரு விளக்கம் தருவார்கள்.

ஆன்மிகத்தைப் பற்றி நாம் தவறாக அறிந்ததும், அப்படி அறிந்ததில் குழம்பியவர்களும் ஏராளம்.

இன்று, ஆன்மிகம் என்ற பெயரை இணைத்தால் எதை வேண்டுமானாலும் சுலபமாக விற்கலாம். அது மட்டும் இல்லை. அதில் கொள்ளை லாபமும் கிடைக்கும். (ஓட்டல் வைத்திருக்கும் வாசகர்களே! ஆன்மிக இட்டலி, ஆன்மிக ஆப்பம் என்று காவிக் கலரில் சட்டினியுடன் தரலாம்)

சில ஆண்டுகளுக்கு முன்னால் கோவில்கள் மற்றும் திருவிழாக்களைப்பற்றியசெய்திகளைவெளியிடவெட்கப்பட்டப் பத்திரிக்கைகள் அனேகம். சமீப காலத்தில், ஆன்மிகம் என்ற பக்கம் இல்லாத செய்தித்தாள் எதுவும் இல்லை. அதுவும் போதாதென்று எல்லா மாத, வார பத்திரிக்கைகளும் வழக்கமான பதிப்புடன் ஆன்மிகம் பெயர் தாங்கி ஒரு தனிப் பத்திரிக்கையை தவறாது வெளியிடுவதைக் கவனிக்க வேண்டும்.

ஆன்மிகத்தைப் பற்றி எழுதுபவர்களும் படிப்பவர்களும் என்றுமே சிந்திக்கமாட்டர்களா என்று நான் ஏங்குவதுண்டு. கோவிலுக்குச் சென்று பூசாரி வைத்த பூவை காதில் சுமந்து வருகின்ற, முறையான கல்வி அறிவை அடையாத மக்களை விட்டுவிடுவோம். ஆன்மிகப் பத்திரிக்கைகளைப் படிக்கும் மக்கள் பலர் முறையான கல்வி அறிவு பெற்றவர்கள் தானே.? அவர்கள் கூட, ஆன்மிகம் என்றால் கடவுள், வழிபாடுகள், கோவில்கள் என்று அடுக்கிக்கொண்டே போவார்கள்.

மலையாள மொழியில் இதை விளக்கும் ஒரு சொற்றொடர் உண்டு. ஒருவன் சொன்னானாம், “அஞ்சனம் என்பது ஞானறியும். அது மஞ்ஞுளப்போல வெளுத்திரிக்கும். அதாவது, “கண் மை என்ன என்று எனக்குத் தெரியும். அது மஞ்சள் கிழங்கைப் போல வெள்ளை நிறத்தில் இருக்கும்.

இந்த ஆள் கண் மையைப் பார்த்திருப்பாரா? இல்லை மஞ்சக் கிழங்கையோ அல்லது வெள்ளை நிறத்தையோ அறிவாரா? நம்ம ஊர் ஆன்மிக அறிவும் மேலே குறிப்பிட்ட கண் மையைப் போலத்தான்.

வாசக நண்பர்களே, ஆன்மிகக் கடையில் வியாபாரம் ஆவது ஆத்திகம். ஆன்மிகம் அல்ல.

ஏனெறால் ஆன்மிகம் வேறு ஆத்திகம் வேறு. இதைப் பலர் நம்பத் தயாரில்லை. அதை விட அதிர்ச்சி தரும் செய்தி,

ஆத்திகமும், ஆன்மிகமும் நேர்-எதிரான அல்லது எதிரும்-புதிருமான செயல்பாடுகளைக் குறிக்கும்.

முடிவாக, இந்த புத்தகத்தைப் படித்தால் ஆன்மிகம் மற்றும் ஆன்மிக பெரியவர்களைப் பற்றி உண்மையான மற்றும் சுவையான தகவல்களைத் தெரிந்து கொள்ளலாம். காலம் காலமாக கலாசாரத்தின் மூலமாக நம் தலையில் நுழைந்த பல தவறான நம்பிக்கைகள் - எதிர்பார்ப்புகள் எண்ணங்கள் ஆகிய சிலவற்றை கழட்டிவிட, இவை உதவலாம்.

சரியான முறையில் ஆன்மிகம், மற்றும் ஆன்மிக பெரியோர்களைப் பற்றி அறிந்து, அவர்களை பின்பற்றி நாமும் நலம் அடைய, இந்தப் புத்தகம் உதவும்.

பொதுவாகவே ஆன்மிகம், தத்துவம் ஆகியவை துப்பறியும் நாவல்களைப் போல ஒரு விறுவிறுப்பாக படிக்கும் விஷயம் இல்லை.

கதைகள் பல சேர்த்து, என்னால் முடிந்தவரை இதை மிக மிகச் சுவையானதாக மாற்ற முயற்சி செய்திருக்கிறேன்.

எனது தேடல், சுமார் 38 ஆண்டுகள் முன்னால், தப்பிக்க ஒரு வாய்ப்பும் இல்லாத ஒரு விபத்திலிருந்து தப்பித்ததில் தொடங்கியது.

அதை ஒரு அமானுஷ்ய சக்தி அல்லது மனிதர்களின் சக்தியை மீறிய ஒன்று என்று சொல்வார்களே. அது எனது தேடலுக்கு வித்திட்டது.

உண்மையாகவே அப்படி ஒரு சக்தி இருக்கிறதா? மனிதர்கள் அதை அடைவது எப்படி என்று தேடப்போன எனக்கு மாதிரியாக நம்மைப் படைத்த பிரம்மாவைக் கண்டுபிடித்த அதிர்ச்சி வேறு.

அடுத்த அத்தியாயத்திற்கு போகும் முன்னால், கீழே கண்ட சில எச்சரிக்கைகளைக் கவனிக்கவும்.

# 1 . 1 எச்சரிக்கைகள் [அனைவருக்கும்]

1. இந்த புத்தகம் ஒரு துறவி ஸ்பெஷல்.

2.. துறவியின் ஒரே ஒரு உடமை அவர்கள் கடின உழைப்பில் பெற்ற அவர்கள் அறிவு அல்லது ஞானம். (முற்றும் துறக்காமல், ஏறத்தாழ, முக்காலும் துறந்த இரண்டாம் வகை துறவிகள்தான் இந்த தத்துவ ஞானிகள் அல்லது பிலாசபர்கள்).

3. துறவிகளைப் பற்றி மக்கள் சரியாக அறிந்தது மிகவும் குறைவு. ஆனால், இவர்களைப் பற்றி தவறாக அறிந்தது என்னவோ, கணக்கே இல்லை. ஆரம்ப காலத்தில் இந்த சாதுக்கள், ஸூபி, புத்தமத குருமார்கள் என்ற எல்லோருமே வெவ்வேறு மதங்கள் வகுத்த பாதையில் பயணம் செய்தவர்கள். அதில் முதிர்ந்தவர்கள்.

4. சில ஞானிகள் நடந்த பாதைகளில் கடவுள், வாழைப்பழம், ஆராதனைகள் என்று எதுவுமே கிடையாது.

5. சாதாரண மனிதர்களான நாம், ஜாதி மதம் இனம் மொழி சாராயம் கட்சி என்ற ஒன்றின் மேல் ஒன்றாக சிறிய வட்டங்களுக்குள் அடைபட்டு, அடிமைப் படுத்தப்பட்டு அவற்றின் விளைவாக அவதிதான் வாழ்க்கை என்ற ஒரு முடிவுக்கு வந்து, ஏதோ ஒருமாதிரியாக வாழ்ந்து கடைசியில் மடிகிறோம்.

6. இதே மக்கள் மத்தியில் பிறந்த சிலர், மாயை விலகி, எதை எதையோ (உண்மை, இறைவன் உள்பட) தேட முயற்சி செய்கிறார்கள், சிலர்.

அதன் காரணமாக, பல சிறிய வட்டங்களிலிருந்து விலகி மனித நேயம், எல்லா உயிர்களின் மீது அன்பு கருணை தியாகம் என்ற பெரிய பெரிய வட்டங்களுக்குள்ளே, ஒவ்வொன்றாக தாவித்தாவி, கடைசியில் ஆன்மிக அறிவு என்ற ஒரு பெரிய

வட்டத்தில் சேர்கிறார்கள்.

இதன் பலன்? புலன்களில் சிக்காத உயர்ந்த அறிவை அடைகிறார்கள் இந்த மக்கள். தானும் துன்புறாமல், துன்புற்ற மற்றவருக்கெல்லாம் உதவும் இவர்களை பொதுவாக ஞானிகள் என்கிறது உலகம்.

7. ஒரு ஆசாமி, நிலத் தகராரில் கொலை செய்துவிட்டு, சட்டத்தின் பிடியில் சிக்காமல் இருக்க, காட்டுக்குள் புகுந்தார். அங்கே நரக வேதனையை அனுபவித்து வரும்போது அதிருஷ்டவசமாக யாரோ ஒரு சாமியாரைக் கண்டார். அவரை வெகுநாள் சுற்றி வந்து காக்காய் பிடித்து, கடைசியாக ஒரு சீடனாக மாறிவிட்டார். (பிற்காலத்தில் குற்ற உணர்வு துரத்த, பிறந்த மேனியாக, தான் வசித்த கிராமத்தை அடைந்தார், கோர்ட்டில் சரணடைந்தார். இவர் கூறிய சம்பவமோ, அல்லது பதிவோ இல்லை என்பதால் இவரை, அதிகாரிகள் விரட்டி அனுப்பிவிட்டார்கள்). அப்படி குற்றம் ஆகியவற்றில் ஆரம்பித்து, மேன்மை பெற்ற ஞானியின் கதைகளுக்கு குறைவே இல்லை.

8. கடன் கொடுத்தவர் தொல்லை, மனைவி மக்களின் இடைவிடாத தொல்லை என்று பொருளுலகச் சுமை தாங்காமல் அருளுலகத்தைத் தஞ்சம் பெற்ற பலரும் உண்டு. அதில் சிலர் பயனடைந்து, ஞானியாக வெளியே வரும் சிலரின் கதைகளும் உண்டு.

9. இதில் எந்த வழியில் புகுந்து இறுதியில் அறிவை அடைந்தாலும், இவர்களுக்கு பொதுவான பெயர் ஞானிகள்.

10. துறவியும் மனிதர்கள் தான் என்ற சிறிய விஷயத்தை நாம் மறக்கக் கூடாது.

11. டாக்டர், இஞ்சினியர் வக்கீல், சார்ட்டர்டு அக்கௌண்டண்டு போலத்தான் துறவிகளும். அறிவு, அனுபவம் ஆகியவற்றில் முழுமையாக முதிர்ச்சியும் மக்களிடையே

அங்கீகாரமும், அடைய பல வருடங்கள் பிடிக்கும். பலர் மக்கள் மத்தியில் அங்கீகாரம் கிடைக்க முயற்சி செய்வதில்லை. எல்லா ஞானிகளும் சம அறிவும், ஒரே திறன் கொண்டவர்கள் இல்லை. மற்ற எல்லா தொழில்துறையைப் போலவே ஒருவருக்கும் மற்றவருக்கும் வித்தியாசம் காணப்படும். போலி டாக்டர்களைப் போலீசார் அடிக்கடி பிடிக்கிறார்கள் இல்லையா? அதே மாதிரி போலிச் சாமியார்களுக்கும் குறைவில்லை.

12. ஞானிகளுக்கும் சில பள்ளிகள் மற்றும் கல்லூரிகள் போன்ற அமைப்புகள் உண்டு. நம்ப முடியவில்லையா?

நமது கல்லூரி மாணவர்கள் போல அவர்களுக்கும் அட்மிஷன் தேர்வு, சில சமயம் மிகக் கடுமையானதாக சில தேர்வுகளும் உண்டு என்று அறிகிறோம். பல கட்டங்களாக தேர்வுகளும் உண்டு. இறுதி தேர்வுகளும். உண்டு.

13. பாதிப் படிப்பில் காணாமற் போகும் நம் மாணவர்களைப் போல பாதி பயிற்சியில் காணாமல் போகும் துறவி மாணவர்களுக்கும் குறைவில்லை. நல்ல சாமியார் உருவாகும் பள்ளிகளில் திருடும் சாமியார் இருப்பதுண்டு, திட்டும் சாமியார் வகையும் உண்டு. வாத்தியாரைக் கிண்டல் செய்யும் மாணவர்களுக்கும் குறைவில்லை. மாணவனே பின் ஒரு காலத்தில், தனது குருவுக்கே குருவாகிய கதைகளும் குறைவில்லை. (இவைகளை விளக்கமாக படிக்க சுவாமி ராமாவின் சுயசரிதை 'லிவிங் வித் ஹிமாலயன் மாஸ்டர்ஸ்' என்ற புத்தகத்தையும், இதே எழுத்தாளரால் உருவான, ஜென் கதைகள் புத்தகத்திலும் காணலாம்).

14.தனிமனிதனாகஉண்மையை தேடும்பலர்இருந்தாலும், ஒரு குழுவாக நம்ம ஊர் ஆராய்ச்சிக் கழகங்களைப்போல சில ஆன்மீக அமைப்புகள் உண்டு.

15. பொருள் உலகில் உள்ள போட்டா போட்டி போன்ற

மசாலாக்கள் அருள் உலக அமைப்புகளிலும் வளர்ந்து வரும் ஞானிகளிடமும் சில சமயங்களில் காணப்படும். அங்கேயும், நம் சாதாரண மக்கள் வாழ்வில் உள்ள அத்தனை பிரச்சனைகளும், அளவில்லாமல் இருக்கும். இதை எல்லாம் படித்து அதிர்ச்சி அடையக்கூடாது. அரைகுறைகள், போட்டி பொறாமைகள், சூழ்ச்சிகள் - இவைகளை எல்லாம் கடந்து, பல நல்ல ஞானிகள் உருவாகிறார்கள்.

16. இங்கும் படிக்காத மேதைகள் உண்டு. இவர்களை ஆத்ம ஞானிகள் என்பார்கள். நம்மவூர் படிக்காத மேதைகளைப் போல. உதாரணமாக, திருவண்ணாமலை ரமணருக்கு குருவே இல்லை.

## 1 . 2 எச்சரிக்கை (வாசகர்களுக்கு)

இந்த புத்தகத்தில் காணும் ஒரு சில கதைகள் (சாதுக்கள், செயிண்ட்ஸ் ஸுபி, புத்தமத குருமார்கள் என்ற ஞானிகள். பற்றியது) எனது வேறு சில புத்தகங்களிலும் இருக்கலாம். ஒரே கதையை வெவ்வேறு விதமாக சொல்லி ஏமாற்றுவதல்ல எனது இலட்சியம். சொல்ல வந்ததை நன்றாக சொல்ல ஒரு சரியான கதை தேவை. அதனாலான ஒரு கட்டாயம். அவ்வளவுதான். கோபித்துகொள்ள வேண்டாம்.

## 1 . 3 எச்சரிக்கை- போலிச் சாமியார்களுக்கு.

இந்த புத்தகத்தை படித்துவிட்டு, தமிழ் நாட்டு மக்கள் . உங்களை போன்றவர்களை ஓட ஓட விரட்டலாம். ஆகவே, போலி சாமியார்களே, காணாமல் போய்விடுங்கள். இனிமேலும், மக்களை ஆசைகள் காட்டி மோசம் செய்ய முடியாது.

## 1 . 4 எச்சரிக்கை - நல்ல நண்பர்கள் மற்றும் சொந்த பந்தங்களுக்கு.

என் மாணவர்கள் என்றும் தனித்தன்மை படைத்தவர்கள். அது போலவே என் வாசகர்களும் தனித்தன்மை கொண்டவராகத்தான்

இருக்க வேண்டும்.

இந்த புத்தகத்தைத் திரும்பத் திரும்ப பலமுறை படித்து, அதன் விளைவாக,

- இவர்கள் பலநாள் பழகிய ஒரு சில தீய பழக்கங்களையும், வேண்டாத சில செயல்களையும் விட்டு விடலாம்.
- புதியதாக, பிறருக்கு உதவும் பல நல்ல காரியங்களில் ஈடு படலாம்.
- மற்ற மனிதர்களுடன் அன்புடன் பழகத் தொடங்கலாம்.
- ஏழைகளுக்கு உதவும் காரியங்களில் ஈடுபடலாம்.
- மிகவும் கோபக்காரரானவர், முன்கோபி என்றெல்லாம் கெட்ட பெயர் எடுத்தவர் இப்போதெல்லாம் மிகவும் அமைதியாகவும், எப்பொழுதும் மகிழ்ச்சியுடனும் காணப்படலாம்.

இதை எல்லாம் கண்டு நீங்கள் பயப்பட ஒன்றும் இல்லை. என்ன, நம்ம பையனுக்கு புத்தி கெட்டு விட்டதோ, யாரோ மந்திரம் மாயம் செய்து விட்டார்களோ என்ற பயப்பட வேண்டாம்.

## அத்தியாயம் 02

# குழப்பலோ குழப்பல்

### 2.1 ஆத்திகமும் - ஆன்மிகமும்,

ஆத்திகம் (இதன் இன்னொரு பெயர் தெய்வீகம்). ஆஸ்த்தா என்றால் வடமொழியில் - நம்பிக்கை. (ஆத்திகம் என்பது கடவுள் நம்பிக்கையும் அதோடு கூடிய மதங்கள் காட்டிய வழியில் நடப்பதையும் குறிக்கும்). ஆனால் ஆன்மிகம் ஆத்திகத்தை கடந்தது. இதை அறியாமல், நமது மக்கள் ஆத்திகத்தையும் ஆன்மிகத்தையும் கலந்து குழப்பிய குழப்பம் எத்தனை காலம் நிலைத்திருக்குமோ!

ஆத்திகத்திற்கு எதிர்ப்பதம் நாத்திகம். இல்லையா?.

நாத்திகர்கள் ஆன்மீகத்தில் இருப்பார்களா? சந்தேகமே வேண்டாம். நிறையவே உண்டு. இதிலிருந்து புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால், ஆன்மீகத்திற்கும் ஆத்திகத்திற்கும் நாத்திகத்திற்கும் எந்த ஒரு தொடர்பும் கிடையாது.

சாமியார்களுக்கு ஏதோதோ தெரியும் என்று பலருக்கு நீளமான ஒரு நம்பிக்கை. சில சமயம் அந்த நீளமான பட்டியலில் ஆங்காங்கே மிக அபத்தமான மற்றும் ஆபத்தான ஐட்டங்கள்

காணப்படும். அதில் ஒன்று, ரசவாதம். அதாவது இரும்பை (ஈயத்தை) தங்கமாக மாற்றும் விஞ்ஞானம். சாமியார்களுக்கும் கடவுளுடன் ஏதோ ஒரு தனிப்பட்ட நட்பு இருப்பதாக வேறு ஒரு நம்பிக்கை.

இதெல்லாம் பரவாயில்லை. ஏழையும் இல்லாமல் செல்வந்தராகவும் இல்லாமல், நம்மைப் போன்றவர்களில் பலர் காணும் நூறு கனவுகளில் ஒன்று இரண்டு மாத்திரமாவது நிறைவேறுகிறது. அதனால் நமக்கு, ஓரளவாவது மனது சமாதானம் அடைவதுண்டு.

உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும், பல கோடி ஏழைகள் எளியவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் கனவு காணும் வாய்ப்பே குறைவு. அப்படியே, கனவுகள் கண்டிருந்தாலும் எதுவுமே நினைவாகாமல் கருகிப் போவதுண்டு. இவர்கள் கூட சாமியார் பின்னால் சுற்றுவதில்லை.

ஆன்மீகத்திலிருந்து ஏதாவது உதவி கிடைக்குமா என்று தேடும் கூட்டம் மத்திய தர மக்களே. இவர்களின் எதிர்பார்ப்பு என்னவாயிருக்கும்? ஞானிகள், அதாவது ஆன்மீகப் பெரியவர்கள் பக்தர்கள் தரும் ஒரு சில வாழைப்பழங்களுக்கு, போடும் கூழை கும்பிடுகளுக்கும் மயங்கி, தாங்கள் அரும்பாடு பட்டு பெற்ற கடவுளின் கனக்க்ஷனை வைத்து, பக்தர்களின் பொருள் உலக கனவுளை நினைவாக்குவார்கள், என்பதே!

இப்படிப்பட்ட பல தவறான நம்பிக்கைகளை அடைத்து வைத்துக் கொண்ட பல தலைகள் அடிக்கடி மொட்டையான கதைகளுக்கும், உயிர் இழந்த அரைகுறை சாமியார்களுக்கும் கணக்கே இல்லை.

## 2.2 தேடுவோரின் தேடல்கள்

நாம் எல்லோருமே நமது வாழும் காலத்தில் எதையெல்லாமோ தேடுகிறோம். சிலர் உட்கார்ந்து தேடினாலும், பலர்

ஓடிக்கொண்டே தேடினாலும், எல்லோருமே தேடுகிறார்கள்.

இந்த தேடுதல் உலக வாழ்க்கையின் ஓயாத ஓட்டத்திற்கு ஒரு சக்தியாக, உந்துதலாக அல்லது காரணமாக அமைகிறது. இந்த புத்தகத்தில் நாம் படிக்கப் போவது சாதாரண மக்களின் தேடலில்லை. ஞானிகளின் தேடல். அது ஒரு வித்தியாசமான தேடல். நாம் எல்லோருமே, எப்போதுமே எதையாவது தேடிக்கொண்டிருந்தாலும், நம்மிடையே, தேடுவோர் என்று தனியாக சில மக்கள் உள்ளனர். இவர்களின் தேடல் மற்ற பெரும்பான்மை மக்களைவிடப் பலவிதத்தில் வேறுபட்டது. இவர்களை நாம் ஞானிகள், சித்தர்கள், குருமார்கள், ரிஷிகள், முனிவர்கள், யோகிகள், செயிண்ட், ஸுபிக்கள், புத்த பிக்குகள், ஜைன முனிகள் என்று பலவாராக அறியலாம்.

இந்த ஒரு சிறுபான்மை மக்களைப் பற்றியும். மற்றும் இந்த மக்கள் விடாது தேடுவதையும், தேடியவருக்கு கிடைப்பதையும் பற்றிய எல்லா விவரங்களை தேடுவதுதான் இந்த புத்தகத்தில் நீங்கள் படிக்கபோவது.

## 2.3 தேடுவோரின் தனித்தன்மை

இந்த தேடுவோரின் தேடலுடன் மற்ற மக்களின் தேடுதலை ஒப்பிடும்போது ஒரு மிக பெரிய வித்தியாசம் தெளிவாகும்.. அது என்னவென்றால், சாதாரண மக்களான நாமெல்லாம் புலன்களில் அறிவதை எல்லாமே தேடுவோம். புலன்களில் சிக்கியதை எல்லாமே மனதால் பிடிப்போம். மனதால் பிடித்ததை எதையுமே விடமாட்டோம்.

ஆனால், இந்த தேடுவோர் எல்லோருமே: தாங்கள் பிடித்திருந்ததை எல்லாம் அதாவது மண், பொன், சொந்த பந்தங்கள் எல்லாவற்றையும் விட்டு விட்டு மனிதனின் புலன்களில் சிக்காத எல்லாவற்றையுமே - (கடவுள், ஆத்மா, உண்மை, அணு, என்று) தேடுவது வழக்கம்.

இந்த மனிதர்கள், சாதாரண மனிதர்களாக உலகே மிதித்தவர்கள், தேடல்கள் தீவிரமாகும் போது ஞானிகள் என்று அறியப்படுகிறார்கள்.

இந்த ஞானிகள் என்பவர்களில் சில உண்மை விஞ்ஞானிகளும், கணக்கில்லாத மெய்ஞானிகளும் அடக்கம். ஆனால், நாமெல்லாம் பெரும் பொருளை அடைய, வங்கியில் ஒரு சேமிப்புக் கணக்குக் கூட இல்லாத இந்த ஞானிகளை தேடிப்போகிறோம்.

இவர்களுக்கு கடவுளிடம் தொடர்பு இருக்கிறதோ? நிச்சயமாக தெரியாது ! ஆனால் நம்மிடம் இல்லாத (அமானுஷ்ய) சக்திகள் இந்த ஞானிகளிடம் இருக்கின்றன என்று தெரிந்தவர்கள் மற்றும் தெரியாதவர்கள் எல்லோருமே நம்புகிறார்கள்.

இவர்களைக் காக்காய் பிடித்தால், தேர்தலில் ஜெயிக்கலாமா? ஜெயித்தவர் மந்திரியாகலாமா? இவர்கள் தயவில் திடீர் பணக்காரராக முடியுமா? கொடுமையான வியாதிகள் உயிரை பறிப்பதிலிருந்து தப்பிக்க முடியுமா?

முடியும் என்று நம்புபவர்கள் அனேகம். இந்த அனேகரில் சிலரை, ஒரு சில போலிச் சாமியார்கள் மொட்டையடித்த கதைகளும் அனேகம்.

## 2.4 மதங்கள், கடவுள் அழிவுகள்?

மதங்கள் பல இருப்பதை நன்றாகவே அறிவோம். ஒன்றே கடவுள் ஒருவனே தேவன் என்று எல்லோருமே படிப்போம். ஆனால் என் கடவுள்தான் உயர்ந்தது மற்றது தாழ்ந்தது என்போம். தான் கும்பிடாத சாமியை கும்பிடுபவரை குறை கூறுவோம், வெறுப்போம், முடிந்தால் அழிப்போம்.

இந்த உலகத்தில் பல மதங்களை சேர்ந்த சாமியார்கள். இந்து (சாதுக்கள்), இஸ்லாமிய (ஸுபி), கிறித்துவ (செயிண்ட்ஸ்) பௌத்த (புத்த பிக்குகள்) என்று உலகெங்கிலும் மதங்கள் அவைகளில் சாமியார்கள். அவர்கள் பலவிதமான, வண்ண

வண்ண உடைகளில் (சிலர் உடையே இல்லாத) வாழும் நல்லவர்கள். இவர்கள் நம்மைப் போன்ற மக்கள், அமைதியாக, நலமாக, நட்புடன் வாழ தங்கள் வாழ்க்கையின் ஒரு கணிசமான காலத்தைச் செலவழிக்கிறார்கள்.

இதில் அப்பாவிகளை மற்றும் திக்குத் தெரியாமல் துயரத்தில் சிக்கியவர்களை ஏமாற்றிப் பிழைக்கும் போலிச் சாமியார்கள், ஞானிகள் நடுவே புகுந்துவிடுகிறார்கள். இவைகள் எல்லாமே ஒரு குழப்பம். நல்லது எது? பொல்லாதது அல்லது போலி எது என்று பிரித்தறியும் அறிவில்லாத மக்கள் போலிகளுக்கு பலியாவதை செய்திகள் தெரிவிக்கின்றன.

மக்கள் தங்களிடையே நட்போடு வாழ, மக்களின் நல்வாழ்வுக்காக உண்டான மதங்கள் இன்று ஏனோ மக்கள் மத்தியில் சண்டை-பூசல் அழிவுகள் உற்பத்தி செய்ய ஒரு முக்கிய கருவி. அது ஏன் ? ஏன்? ஏன் ?

(கத்தி மனித உயிரை காக்க அறுவை சிகிச்சைக்கும் பயன் படும். கொலை செய்து உயிரை எடுக்கவும் பயன்படும் - நன்மையோ - தீமையோ, விளைவது கத்தியில் இல்லை. கத்தி, யார் கையில் இருக்கிறது? அவர்கள் புத்தி என்ன சொல்கிறது என்பதைப் பொருத்தே இருக்கிறது. அவ்வப்போது மதங்கள் தவறான கைகளை சேர்வதால் அழிவு வருகிறது.)

இந்த சாமியார்கள் எல்லோருக்குமே அமானுஷ்ய சக்திகள் உண்டா? அப்படி உண்டென்றால், அது இவர்களுக்கு எப்படி கிடைக்கிறது? இந்த சக்தியினால் யாருக்கு என்ன உபயோகம்?

பொருள்,பதவி என்று எதையுமே தேடாத சாமியாருக்கு சக்தி இருந்தென்ன. இல்லாவிட்டால் என்ன? பொருளைத் தேடியே வாழும் நமக்கு. இப்படிப் பட்ட சக்தி கிடைத்தால் எவ்வளவு ஜாலியாக இருக்கும்? இந்த சக்திகளை சாமியார்களால் எப்படி பயன் முடிபடுத்த முடியும்?

உண்மையான சாமியார்கள் தங்கள் சக்தியை மக்கள் நலத்திற்கு பிரயோகிப்பதை கதைகளாகப் படித்திருப்போம். அப்படி உபயோகிக்கும் போது, ஞானிகள் பதிலாக நம்மிடம் எதிர்பார்ப்பது என்ன?

உலகெங்கிலும் மக்களில் சிறிய ஒரு பகுதி வளத்துடன் வாழ, ஒரு நாளைக்கு ஒரு வேளைகூட உணவும், வாழ்க்கைக்கு அவசியமான அடிப்படை வசதி எதுவும் இல்லாமல் வாழ்ந்து மடியும் பெரும்பான்மை மக்கள் மறுபுறம். ஏன்? ஏன்? ஏன்?

கடவுள்தான் இந்த உலகை உருவாக்கினால், உலகெங்கிலும் பசி, நோய்கள் என்று தினம் தினம் செத்து வாழும் இந்த ஏழைகளை ஏன் படைத்தார்? கடவுள் ஒரு சாடிஸ்டா?

இந்த சாமியார்களின் சக்தியை கொண்டு, உலகத்தில் அழிவுகளை தவிர்க்க முடியாதா? இவர்கள் உதவியுடன் உலகத்தில் நிரந்தர அமைதியை உருவாக்க முடியாதா? ஏழை எளியவரின் வாழ்வில் என்றுமே வசந்தம் வரவழைக்க முடியாதா?

யார் இந்த பிலாசபர்கள்?. கிரேக்க மொழியில் பிலோ என்றால் நட்பு அல்லது நண்பன், ஸோபி என்றால் ஞானம் அல்லது அறிவு. பிலாசபர் என்பவர் அறிவின் நண்பர். அல்லது அறிவை மாத்திரமே நண்பராகக் கொண்ட மக்கள்.

இந்த பிலாசபர்கள், ஞானிகள், துறவிகள், புத்த பிட்சுக்கள் சுபிமுனிவர்கள் எல்லோருக்கும் உள்ள ஒரு ஒற்றுமை, தன் வாழ்நாளில் தன்னைப்பற்றிய சிந்தனைகளை ஒதுக்கிவைத்து, (அறிவில்லாமல்) வாடும் மக்களைப் பற்றிச் சிந்தனை செய்து அவர்களின் நலம் காண விரும்பும் மக்கள்.

எல்லாம் சரி, நாம் தாடி வளர்க்காமல், காட்டில் நுழையாமல் சாமியாராகி, சாமியாரின் சக்திகள் எல்லாமே அடைய முடியுமா? காட்டிற்குள் புகுந்து பல வருடங்கள் தவம் செய்வது அவசியமா? அதே சக்திகளை அடைய குறுக்குவழி உண்டா? அதையும் தேடி

விடுவோம்.

இவைகள் என் மனதில் இருபது வருடம் முன்னால் தோன்றிய கேள்விகளில் ஒரு சில. பதிலை தேடினேன். பதில் சொல்ல யாரேனும் கிடைப்பாரா என்று ஊர் ஊராக சென்று தாடிகளில் ஒளிந்திருக்கும் ஞானிகள் யாராவது கிடைப்பர்களா என்று தேடினேன். ஞானிகளால் உருவான புத்தகங்கள், எழுதப்பட்ட கவிதைகள் எல்லாவற்றையும் தேடினேன்.

அதன் விளைவு, இந்த புத்தகம்.

2.5 நாமெல்லாமே ஞானிகள்தான்!

பிறவியில் நாம் எல்லோருமே ஒரு விதத்தில் ஞானிகள்தான், யோகிகள்தான். ஆனால் காலப்போக்கில் நாம் வாழும் சமுதாயத்தை பல அறியாமையும், தவறான அறிவும் பாதித்துள்ளன. அதன் விளைவாக நம்மை பல அழுக்குகள், பயங்கள், தவறான நம்பிக்கைகள் விடாமல் தொடர்கின்றன. இதனால் நாம் நமது ஞானிகளின் தன்மையையும் சக்தியையும் இழந்து விட்டோம்.

நம்மை பிடித்த அழுக்கைக் களைந்துவிட்டாலே போதும் நாம் பாதி யோகிகள்தான். மீதத்திற்கு அறிவு பூரணமாக சிந்தனைகள், ஞானிகளின் வழிகாட்டல்கள் மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு வழிகாட்டும்.

இதை தொடரும் கதைகள், வாழ்க்கை குறிப்புகள் எல்லாமே துறவிகளை நாம் முழுமையாக அறிந்து கொள்ள உதவும்.

அத்தியாயம் 03

# சாமியார்கள் தோன்றுவது எப்படி?

## 3 . 1 அறிமுகம்

## சாமியார்கள் ஏன் உருவாகிறார்கள்?

வெளிப்படையாக, ஒவ்வொரு ஞானியின் வாழ்விலும் ஒரு அதிர்ச்சி, தோல்விகள் என்று ஏதாவது ஓர் திருப்புமுனையைக் காணலாம். அதுவே அவர்கள் பொருள் வாழ்க்கையிலிருந்து விலகி அருள் வாழ்க்கைப் பாதைக்கு மாறுவதாகச் சொல்லலாம்.

இதுமுழுவதும்உண்மையாகஇருக்கவாய்ப்பில்லை.ஏனென்றால், அதைவிட மோசமான நிகழ்வுகளின் நடுவே நிம்மதியாக பல கோடி மக்கள் வாழ்ந்து வருவது நாம் அறிந்ததே.

இந்த உலகம் மண் பெண் பொன் முதலான எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டு இருப்பவரை ஏன் அதிசயமாக பார்க்கிறது.?

இல்லறத்தில் புகுந்து சந்ததிகளை உருவாக்கி, கடன் வாங்கி அவர்களுக்குக் கல்வி தந்து, திருமணம் செய்து வைத்து அதிலும் திக்குமுக்காடி, அல்லல் பட்டு எப்போது காலன் நம்மை

அழைத்துச் செல்வான் என்று அலறுவதை நாம் அறிவோம்.

அப்படிப்பட்டவரைக் காணும் போது அனுதாபப்படும் நாம், இவைகளை விட்டு விலகி நிம்மதியாக துறவறத்தை விரும்பும் ஒரு மகனை அல்லது மகளைக் கண்டு, மகிழாமல், நாம் துயரம் அடைவது ஏன்?

அதற்கு சுருக்கமாக ஒரே வார்த்தையில் சொன்னால் மாயை.

எல்லா உயிர்களையும் தன் பிடியில் மனிதரைச் சிக்க வைத்திருப்பது மாயைதான். விளக்கமாகச் சொன்னால், இந்த அண்டம் இயங்க மாயை தேவை. அண்டம் இயங்க பிள்ளை-குட்டி, நன்மை-தீமை, பாவம்-புண்ணியம், லாபம்-நட்டம், விரோதிகள்- நண்பர்கள், திருடன்-போலீஸ் எல்லாமே தேவை. இவைகள் எல்லாமே மாயையின் வேலைதான். உலகின் நிகழ்ச்சிகள் எதுவுமே மாயை இல்லாமல் நிகழாது. இதை ஓட்டங்கள் என்ற புத்தகத்தில் அலசுவோம்.

ஆன்மிகம் என்றால் என்ன? ஆத்மா என்ற வட சொல் ஒருமாதிரியாக திரிந்து தமிழ் மக்கள் வாயில் அகப்பட்டு ஆன்மாவாகியது ஒருபுறம். ஆன்மா சம்பந்தப்பட்ட அறிவுக்கு, செயல்பாட்டிற்கு ஒரு பெயர் வேண்டாமா? அதன் பெயர்தான் ஆன்மிகம்.

ஆத்மா நம் புலன்களுக்குள் சிக்காது. அதுபோலவே கடவுளும் புலன்களுக்குள் சிக்குவதில்லை. ஆக புலன்களில் சிக்காத எல்லா அறிவையும் தேடுவது ஆன்மீகத்தில் அடங்கும்.

## ஆன்மிகத்தை அறிவது எப்படி?

ஆன்மிகத்தின் அடிப்படையை அறிய காலம் காலமாக என்னைப் போன்ற பலர் முயற்சிகள் செய்வதுண்டு. அதற்கு சரியான வழி என்ன?

தற்போது சுற்றிவரும் ஐந்து நட்சத்திர ஆன்மிகவாதிகளை

விட்டுவிடுவோம். இவர்கள் கள்ள நோட்டு, கற்பழிப்பு, கொலை என்று ஆன்மிகத்திற்குச் சிறிதும் தொடர்பே இல்லாத செயல்பாட்டுடன் தலைவர்களின் துணையுடன் ஏமாறும் மக்களை ஏமாற்றும் வித்தை அறிந்தவர்கள்.

அறிவதில் சிறிதும் சந்தேகம் இல்லாமல், ஆன்மிகத்தை அறிவதற்கும், அறிந்த அறிவினால் பயன் பெறவும், சிறந்த வழி என்ன? கடந்த கால ஆன்மிகவாதிகளை ஆராய்வதுதான் சரி என்று மனதில் உதித்தது.

முதற்படியாக, புகழ் பெற்ற சில ஆன்மிக பெரியோர்களைத் தேர்ந்தெடுத்து. அவர்கள் வாழ்க்கையிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய பற்பல பரிமாணங்களை அலசி அறிந்ததுதான், எனது முதல் கட்டத் தேடல்களின் சாரம்.

வாழ்க்கையில் மூன்று வகை உண்டு.

1. அதிகமான மக்கள் வாழ்வது, இல்லறம் என்னும் வாழ்க்கைப் பாதை.

2. இரண்டாவது பொருள் ஆதாரத்தில் இயங்கும் வாழ்வைத் துறந்த துறவறம்.

3. மூன்றாவதாக இல்லறத்திலிருந்தே பொருள் ஆதார வாழ்வை தள்ளி வைத்து மனதால் நடத்தும் விதமான துறவறம்.

பொருள் அல்லது இல்லற வாழ்க்கை என்பதை நாம் நன்கு அறிவோம். எதை எல்லாமோ கண்ணால் கண்டு, கண்டதை எல்லாம் மனதால் எடுத்து, துக்கம் - மகிழ்ச்சி, நல்லது-கெட்டது, என்ற கணக்கில்லாத, இரு-துருவங்களை மனதால் உருவாக்கி, அதை தொடர்ந்து சென்று, சென்றதால் துன்பத்தோடு இணைந்து வாழ்ந்து வளர்ந்து மடிவதே.

அருள் வாழ்க்கையில், நாம் புலன்களால் உணர்வதை, படிப்படியாக ஒதுக்கி வைக்கப் பழகுவது தியானம். அதில்

தேர்ந்து, பிறகு புலனில் சிக்காதவைகளைத் தேடி, அவற்றை மனக்கண்களால் கண்டு, அறிவால் உணர்வது. பொருளுலக த்தில் வாழ்பவரின் துயர்களைத் துடைப்பது.

## 3 . 2 . சாமியார்கள் உருவாகிறார்கள்.

சரியாகப்பார்த்தால்சாதாரணமனிதரேமகானாகமாறுகிறார்.அது உண்மையானால், ஏன் நாம் எல்லோருமே மகானாகவில்லை? அது சிறிது சிக்கலான விஷயம். இப்போ, ரொம்ப சுருக்கமா சொல்லிட்டு ஓட்டங்கள் என்கிற அடுத்த புத்தகத்திலே அதை அலசிடுவோம்.

மனதளவில் ஏற்படும் மாற்றங்கள் ஒருவர் சாமியாராக அல்லது ஞானியாக மாறக் காரணமாகின்றன. எதிர்பாராத ஒரு சிக்கல், தொடரும் ஏமாற்றங்கள், எல்லையில்லாத் தோல்விகள், மரண பயம்போன்றபலகாரணங்கள்மனமாற்றங்களைதருவிக்கின்றன. இவைகளை இப்போது விளக்கமாக பார்க்கலாம்.

சிலர், திட்டமிட்டு பாதை மாறுவதும் உண்டு. இவர்கள் இறக்காமலேயே, சில சடங்குகள் மூலம், இரண்டாவது பிறவி எடுக்கிறார்கள். தமது புதிய பிறவிக்குத் தானே பெயர் ஒன்றை தேர்ந்தெடுக்கிறார்கள். இந்த இரண்டாம் பிறவி எடுக்க வேள்வித்தீயிலே தனது பழைய உடைகளை எரிப்பது சடங்கின் ஒரு அம்சம். இதோடு தன் மனத்தில் இருந்து பழைய பிறவி, அதில் கண்ட அனுபவங்கள், அதோடு இணைந்த சொந்தங்கள் பந்தங்கள் எல்லாமே வேள்வித் தீயில் அழிக்கப் பட்டுவிட்டது என்று கொள்ளவேண்டும்.

இப்போது இந்த விளக்கத்தை இங்கே நிறுத்துவோம். அடுத்த வகையை அலசலாம். கற்ற அறிவு, அறிஞர்கள் அல்லது ஞானிகளின்அருகாமைஆகியற்றைசிலருக்குஞானப்பாதையில் ஒரு ஈடுபாட்டை ஏற்படுத்துகிறது.

தனிப்பட்ட முறையில் உண்டான விசித்திர அனுபவங்கள்கூட

இந்த வகையில் அடங்கும்.

இப்போது மூன்றாம் வகை மக்களை ஆராய்வோம். பொருள் வாழ்வில், தொல்லைகள் படாதவர் என்றுமே இருந்ததில்லை, இப்போதும் இல்லை, இனியும் இருக்கப் போவதும் இல்லை. அப்படியிருந்த போதும் பெரும்பாலான மக்கள் அந்த தொல்லைகளோடு வாழப் பழகிவிடுகிறார்கள். போதாத குறைக்கு, நமது துயரங்களுக்குக் காரணம் நமது ஊழ்வினைகள் மட்டுமே அதாவது முந்தய பிறவியில் நாம் செய்ததாக சொல்லப்படும் தீய செயல்கள், பிறருக்கு இழைத்த கொடுமை என்று காரணம் சொன்னால் போதும். உடனே சமாதானமாகி, அதே துயரத்தோடு ஒன்று கலந்து, இனிதே வாழ்ந்து கடைசியில் மடிகிறோம். இதுவும் போதாது என்றால், எல்லாமே ஈசன் செயல் என்று எல்லா துன்பத்தையுமே ஈசியாக விழுங்கி, ஏப்பம் விட்டு விடவும் நாம் தயார்.

இதை எல்லாம் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லாத சிலரும், முரண்டு பிடிக்கும் பிடிவாதக் காரர்களும் எப்போதுமே உண்டு. இவர்கள் வித்தியாசமானவர்கள். இந்த பொருளுலக தொல்லைகள் இவர்களை அதிகமாகவே பாதித்துவிடும். அதிலிருந்து தப்பித்து ஓட ஆரம்பித்து, தங்களை அறியாமல் அருள் உலகில் தடுக்கி விழுவார்கள்.

ஓட வந்தவர் எல்லோருமே ஞானியாகிவிடுவதில்லை.இதில் பலர் பொருளுலகுக்கே திரும்புவதும், சிலர் அருள் பாதையிலேயே தங்குவதும் சரித்திரம். வால்டயர் என்ற பிரஞ்சுநாட்டு பிலாசபர் அதாவது தத்துவ ஞானி, ரொம்ப தமாஷான ஆள். இவருடைய கற்பனையில் ஒரு கதை உருவாகி அதில் ஒரு போர்வீரரை ஓடவிட்டு அவரை ஒரு ஞானியாக்கி காட்டுகிறார்.

(தத்துவஞானிகளின் சிறப்பே, அவர்கள் பேசுவது எதுவும், நமக்கெல்லாம் புரியாது. நமக்கு புரியாததை எவரேனும் பேசினால் அவரை தத்துவஞானியாக நாம் அறிவோம்

இல்லையா?

தத்துவ ஞானிகளில் வால்டயர் அதிக வித்தியாசமானவர். முக்கியமான ஒன்று, இவர் எழுதியதை எளிதாகப் புரிந்தகொள்ள முடியும், இரண்டாவது, அவர் எழுத்துக்களில் நகைச்சுவை நிறைந்து இருப்பது). இங்கே இந்த அதிசயத்தைக் காண்போம்.

## 3.3 வால்டயர் எழுதிய ஜாடிக் என்கிற கதையைத் தழுவிய ஒரு சிறுகதை

### கதை 01 ஜாடிக்



ஐரோப்பியா கண்டத்தில் எங்கோ ஒரு நாடு. ராஜா-ராணி ஆண்ட காலம். அந்த நாட்டில் ஒரு பிரபலம் – ஜாடிக் என்ற பெயர் கொண்ட ஒரு இளைஞர். அரசவையில் இடம்பெற்றவர். மேலும் ஒரு சிறப்பு, இவர் அரசரின் ஆலோசகரில் முக்கியமானவர். போர்களில் மன்னனுக்கு உறுதுணையாக நின்ற இவர், வாட்போரில் சிறந்தவர்.

அதே நாட்டில் வேறு ஒரு பிரபலம். வயதானவர். (பிரபலங்களைத் தான், சுருக்கமாக, பிரபு என்று அழைப்பார்களோ?) அவருக்கு மிக அழகான ஒரு பெண் உண்டு. ஜாடிக் திடீரென்று ஒரு நாள் இந்த பெண்ணை காண்கிறார். கண்ட உடனேயே தீராத காதல்

கொள்கிறார்.

ஆனாலும், பல இளைஞர்களைப்போல இவருக்கும் ஒரு தயக்கம். அவர் மனம் கவர்ந்தவள் முன்னால் வந்து தன் காதலைச் சொல்லத் தயங்குகிறார்.

சொல்வதற்கு, ஒரு சரியான நேரத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கிறார். (சில சமயங்களில் இந்த இடைப்பட்ட நேரத்தில் வேறு ஒருவர் தன் காதலைச் சொல்லி அப்படிக் காத்திருந்த பெண்ணோடு திருமணம் முடித்த கதைகளும் நமக்கு தெரியுமே!). அப்படி ஒரு சரியான நேரமும் வந்தது. எப்படி?

ஒரு நாள், கொள்ளையர்கள் இந்த பெண்ணை தாக்க முயற்சிக்க, தனது வாள் வீச்சுத் திறமையினால், கொள்ளையருடன் கத்திச்சண்டை போட்டு வெற்றி கொள்கிறார் ஜாடிக். அந்த பெண்ணையும் காப்பாற்றுகிறார். அப்போதே அந்த பெண்ணின் மனத்தில், இடமும் பிடித்து விட்டார் என்றே சொல்லலாம்.

கொள்ளையருடன் செய்த வாட்போரில், ஜாடிக்கின் கண் ஒன்று, காயம் அடைந்து, வீங்கியது.

இந்தக்காலத்தில் நம்ம ஊரில், பெரிய மனிதர்களை குணப்படுத்த, அமெரிக்காவில் இருந்து டாக்டரை வரவழைப்பது போல, அந்தக் காலத்தில் கிரேக்க நாட்டிலிருந்து மருத்துவ நிபுணர்கள் வரவழைக்கப் பட்டார்கள். இவர்கள் ஏராளமான மருந்து மூட்டைகளுடன் வந்து சேர்ந்தார்கள்.

ஜாடிக்கின் கண்ணைப் பரிசீலித்து, வலது கண்ணில் பட்ட காயம் ஆராது என்றும், இடது கண்ணின் நோயை சுலபமாகக் குணப் படுத்தலாம் என்றும் கூறினார்கள். அதுமட்டுமல்ல, சில நாட்கள் தங்கியிருந்து, ஒரு குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட நேரத்தில், இந்த நபர் மரணம் அடைவார் என்று ஒரு புத்தகமும் எழுதிவிட்டு தங்கள் ஊருக்கு திரும்பி விட்டார்கள். ஜாடிக் மட்டும் இந்த புத்தகத்தைப் படிக்கவில்லை.

வலது கண்ணில் பட்ட காயம் ஆராது என்று கிரேக்க மருத்துவர்கள் கூறியதை காற்று வழிக் கேட்டு அறிந்த சமீரா (அதுதான் அவள் பெயர்) மனம் உடைந்தாள். ஒரு ஒற்றைக் கண் மனிதருடன் வாழ்க்கை நடத்துவது இயலாத காரியம் என்று ஏற்கனவே நினைத்திருந்ததால், வேறு ஒருவரை மணக்கத் தயாரானாள்.

வைத்தியர்கள் தங்கள் நாட்டிற்கு திரும்பிய பின்னர், திடீரென்று ஒருநாள், எந்த ஒரு வைத்தியரின் உதவியும் இல்லாமல், கண்ணின் மீது வந்த காயத்தில் இருந்த கொப்புளம் தானாகவே உடைந்தது. ஓரிரு நாட்களில் காயமும் சரியாகிவிட்டது. அப்போது, இரு கண்களும் அவருக்கு நன்றாகவே தெரிந்தது.

இந்த நல்ல செய்தியை சமீராவுக்கு தெரிவிக்க ஓடினார். அப்போது, சமீராவின் திருமணம் நடந்து முடிந்து விட்டது. உலகமே அவர் கண் முன்னால் இருண்டு விட்டது. தான் வாழ்வதற்கு ஒரு காரணம் இல்லாமல் போனதுபோல உணர்ந்தார். உலகமே மாயை என்று உணர்ந்தார். அவரை, நாடு போ - போ என்று விரட்டியது. காடு வா - வா என்று அழைத்தது. காட்டை அடைந்தார். தினமும் நீண்ட நேரம் தியானத்தை மேற்கொண்டார்.. கடவுளுக்கும் தனக்கும் உள்ள தூரத்தை அளக்க எத்தனித்தார்.

சில நாள் கழித்து, காட்டில் ஒரு விவசாய குடும்பத்தைச் சேர்ந்த இளம் பெண் ஒருத்தியைக் கண்டார். சில காலம் முன்னால், தமது நாட்டில், கடைசி நிமிஷத்தில் கோட்டை விட்ட, பிரபுவின் மகள் சமீராவிடம் காணாத நளினத்தையும், கொள்ளை அழகையும் அந்த காட்டுவாசியான மங்கையிடம் கண்டார். இருவரும் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்தனர்.

இருண்ட ஜாடிக்கின் வாழ்க்கை, இப்போது ஒளிமயமானது. நாட்களும் மகிழ்ச்சியாகவே நகர்ந்தது.

திடீரென்று ஒருநாள், ஜாடிக்கின் மனதில் ஒரு சிறிய சந்தேகம்.

மனைவி தன்னை உண்மையிலேயே நேசிக்கிறாளா? இதைக் கண்டறிய விரும்பினார்.

தனது நெருங்கிய நண்பனை உதவிக்கு அழைத்தார். திட்டம் ஒன்று தயாரானது. அவர்கள் தீட்டிய திட்டப்படி, ஜாடிக், ஒரு சவப் பெட்டியில் கண்ணை மூடிப் படுத்திருப்பார். நண்பர், ஜாடிக்கின் மனைவிக்கு, கணவன் இறந்த தகவல் தருவார். அவள் வருவாள். பின்னர் நண்பர் தன் அனுதாபங்களைத் தெரிவிப்பார். அதன் முடிவில், தான் அவளை மணக்க விரும்புவதாகத் தெரிவிப்பார். அவள் பதிலைப் பொறுத்து, அவள் ஜாடிக்கை உண்மையாகவே நேசிக்கிறாளா இல்லையா என்பது தெரிந்து கொள்ளலாம், இல்லையா?

நண்பரும் நன்றாகவே நடித்தார். முதலில் நண்பனின் விருப்பத்தை ஆவேசமாக மறுத்த ஜாடிக்கின் மனைவி, உடனடியாக அவரை மணந்து கொள்ள சம்மதம் அளித்தாள்.

சவப்பெட்டியிலிருந்து எழுந்த ஜாடிக் காட்டிலிருந்து ஓடினார், இப்போது, வேறு ஒரு நாட்டிற்கு.

நடுவழியில் ஒரு இளம் பெண்ணை ஒரு மனிதன் அவள் தலை முடியைப் பிடித்து அடித்து துவைத்தவண்ணம் இருக்கிறான். இப்போது, அந்த பெண்ணோ, அய்யய்யோ, என்னை யாராவது காப்பற்றுங்களேன், என்று அலறுகிறாள். பொதுமக்கள் வேடிக்கை பார்க்கிறார்களே ஒழிய யாருமே அந்த அப்பாவிப்பெண்ணின் உதவிக்கு வருவதாகக் காணோம். (ஊருக்கு ஊர் இதே கதைதானோ?)

ஜாடிக் இந்த இருவரையும் பிரித்துவிட முயற்சி செய்கிறார். தன் மேலும் ஓரிரு அடிவிழுகிறது. போர்வீரரான நமக்கே இந்த அடி இவ்வளவு வேதனை தந்தால், இந்த அப்பாவிப் பெண்ணுக்கோ! என்று வியந்து, வாட்போரில் உரமேறிய தன் கைகளால் பலமாக அந்த மனிதனின் மேல் ஒரே ஒரு அடிபோடுகிறார்

ஜாடிக். பெண்ணை அடித்து துன்புறுத்தி வந்த மனிதன், செத்து விழுகிறான்.

ஜாடிக்கை நோக்கி, இப்போது அடி வாங்கிய பெண் முன்னைவிடத் தீவிரமாகக் கதறுகிறாள். படுபாவி, சண்டாளா. என்னைக் காப்பாற்ற சொன்னால் என் கணவனை கொன்று விட்டாயே, என்று தொடங்கி நீ உருப்படுவாயா? நாசமாகப்போக என்றெல்லாம் கதற, அரசரின் காவலாளிகள் (அந்த ஊரில், அந்தக்கால போலீஸ்) ஜாடிக்கைப் பிடித்துச் சென்று சிறையில் அடைக்கிறார்கள்.

இப்படி மாறிமாறி கதை, அமர்க்களமாக நகர்கின்றது. நாம் இங்கே இதை நிறுத்திவிடுவோம். (இண்டெர்னெட்டில் தேடினால் வால்டயர் எழுதிய ஜாடிக் என்ற கதை கிடைக்கும் அதைத் தேடிப் படியுங்கள்)

## 3 . 4 ஜாடிக் கதையின் பாடங்கள்

மனிதன் கனவுகளில் மூழ்கி மாயையின் பிடியில் சிக்கி வாழ்கிறான். உறக்கமும் கனவுகளும் நிரந்தரமல்ல. இரண்டும் கலையும் தன்மையுடையது. மனிதன், தன் கனவுகள் கலைந்தால் (தான் எதிர்பார்த்ததை அடைய முடியாவிட்டால்). உடைந்து போகிறான். உருக்குலைந்து போகிறான். உடனே, காடு, சாமியார், தியானம் கடவுள் என்று திசை மாறுகிறான் - காலங்கள் காயங்களை ஆற்றுகின்றன. காயங்கள் ஆறிய உடனே, அதே மனிதன், அடுத்த கனவு காண்பதற்குத் தயாராகிறான் !

ஆனால் கிடைத்த அடி பலமாக இருக்குமானால், ஒருவன் அருள் உலகத்தினுள்ளே வீசப் படுவான். அப்படி ஒரு முறை அருள் உலகை அடைந்தால், எவரும் பொருள் உலகுக்குத் திரும்பி வர வாய்ப்புகள் குறைவு. பொருள் உலகத்தின் ஈர்ப்பு ஞானியாவதற்கு ஒரு இடையூறு.

காட்டில் புகுந்து ஞானியாவதற்கு கண்மூடித்தனமான காதல்

ஒன்று மட்டும் காரணமல்ல, இடைவிடாமல் தொடரும் வெற்றியும் ஒரு காரணமாக இருக்கலாம். ஒரு  அதாவது, அறிவதில் ஆர்வம் கூட ஒரு காரணமாக இருக்கலாம்.

பலவித ஏமாற்றங்கள் பொருளுலகத்திலிருந்து மக்களை விரட்டி அருளுலக வாசியாக, ஞானியாக மாற்றிவிடும். பொருள் உலகத் தோல்விகளை அருளுலகத்தின் உதவியால் வெற்றி காண முயற்சி செய்த சிலர்  எப்போதுமே உண்டு. இவர்கள் வித்தியாசமான முடிவுகளுடன் வாழ்ந்து முடிகிறார்கள்.

ரமண மகரிஷியின் வாழ்க்கையை புரட்டும்போது நாம் அறிவது, சிறுவயதில்  தான் இறந்து போனதை போல ஒரு அனுபவம், திருவண்ணாமலைக்கு அவரை விரட்டியது அன்று.

பக்தி மார்க்கத்தில் திளைத்த காளி கோவில் பூசாரி ஆன்மீகத்தில் அடிவைத்ததற்கு பின்னணியில் காரணம் ஒரு தோல்வியோ அல்லது துன்பமோ  இருந்ததாகத் தெரியாது. அவர்தான் ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

இவை ஒன்றுமில்லாமல் இரண்டு வயதே ஆன குழந்தை ஒரு ஞானியின் மனதில் இடம் பிடித்து பின் ஆன்மிகப்  பள்ளியில் வளர்ந்து, பிற்காலத்தில் ஸ்வாமி ராமாவாக, உலகப் புகழ் பெற்ற ஞானியாக, யோகியாக அங்கீகரிக்கப் பட்டார். அவருடைய ஆன்மிகப் பயணத்திற்கும் பொருள்  உலகப் புயல் ஏதும் காரணமல்ல.

உலகத்தின் பல பகுதியிலிருந்து மக்களை இழுத்தார். நம்மைப்போன்ற இரண்டுங்கெட்டான் அல்லது அரை குறைகள் என்பார்களே, அப்படி பட்டவர்கள் அனைவரும் ஆன்மிகத்தை அறியும் வகையில் தனது சுய சரிதை மூலம், ஆன்மீகத்தின் பல பரிமாணங்களை உலகுக்கு எடுத்து உணர்த்தினார்.

## 3 . 4  போலிகள் நிறேந்த உலகத்தில்,

நல்ல ஞானிகளை எப்படிக் கண்டுபிடிப்பது?

கீழே வரும் கதை, இதற்கான பதிலைச் சொல்லும்.

## கதை 02 கந்தசாமி ஞானியைத் தேடினார்.

நம்ம ஊர் மனிதர் ஒருவர் ஒரு ஞானியைத் தேடிய ஒரு கதையைப் படியுங்கள்.

கவலைகள் வாழ்க்கையின் முக்கியமான அம்சம். விவசாயியான கந்தசாமிக்கு எது இருக்கிறதோ இல்லையோ, கவலைக்கு மட்டும் அதில் குறைவே வந்தது இல்லை.



அவருக்கு ஒரு பெரிய குடும்பம் அதோடு சிறு விவசாயியை என்றுமே இணைபிரியாத சிறிய வருமானம். (இவை இரண்டுமே ஏழைகளின் மீதுள்ள சாபமோ) பெரும் மழையோ, நேரம் தவறிய மழையோ, முழுவதும் தவறிய மழையோ, இவர் வீட்டின் அருகே சுற்றித்திரியும் பூனைகளுக்கு இவர் வீட்டு அடுப்பில் குடிவர பல வாய்ப்புகளை அள்ளித்தரும்.

திருமணத்திற்கு தயார் நிலையில் இருக்கும் பெண் குழந்தைகள், குடித்து விட்டு, வம்பை வளர்த்து, ஊர்சுற்றும் பொறுப்பில்லாத பெரிய மகன், அவசியமில்லாத அடிதடியிலும் சில்லரைக் குற்றங்களில் நேரத்தைச் செலவிடும் ஒரு செல்ல மகன். போதுமா,

கந்தசாமியின் கவலைக்கான காரணங்கள்.

மனத்தில் இந்தக் கவலைகளின் சுமை ஒரு புறம் அழுத்த, தலையில் காய்கறி மூட்டையின் சுமையுடன் சில கிலோமீட்டர் தொலைவை நடந்தே கடந்து, அடுத்துள்ள உழவர் சந்தைக்குள் நுழைந்தார்.

களைப்பு நீங்க ஒரு மரத்தடியில் மூட்டையை இறக்கி வைத்துவிட்டு, தானும் சற்று இளைப்பாறினார். சற்று கண் அயர்ந்தார். எத்தனை நேரம் கண் அயர்ந்தாரோ தெரியாது. அருகில், இருவர் பேசிக்கொண்டதால் எழுந்த சத்தம், அவரது உறக்கத்தைக் கலைத்தது.

பேச்சிலிருந்து, அவர்கள் இருவரும் கந்தசாமியைப் போலவே தங்கள் துயரங்களுக்கு ஒரு நீண்ட பட்டியல் போட்டுக்கொண்டு அவற்றைத் துடைக்கும் வழி தேடிவரும் மனிதர்களாகவும், தன்னைப் போன்ற கவலைகளுக்கு மட்டுமே சொந்தமான மனிதர்களாக, உணர்ந்தார்.

அவர்கள் சமீபத்தில் ஒரு ஞானியை சந்தித்ததால் அவர்கள் தற்போது சற்று தெளிந்த நிலையில் உள்ளதாக அவர்களின் பேச்சு தெரியப் படுத்துகிறது. தன் கண்களை விழித்து, நின்று, சோம்பல் முறித்து, அடுத்து அமர்ந்திருந்த இரு மனிதர்களிடம் தன்னை அறிமுகம் செய்து கொண்டார். அதோடு, அவர்கள் கண்ட ஞானி வசிக்கும் இடத்தையும், போகும் வழியும் தெரிந்து கொண்டார்.

அவ்வளவுதான், அவருடைய அனைத்து பிரச்சனைகளுக்கும் விரைவில் விடை கிடைக்கும் என்ற நம்பிக்கை மனதில் துளிர்விட்டது. அந்த வினாடியிலேயே தன் மனதின் பாரம் குறைய ஆரம்பித்து விட்டதாக உணரலானார்.

ஒரு நல்ல நாளை அவர் மனைவி தேர்ந்து எடுக்க, அந்தக் குறிப்பிட்ட ஞானியைச் சந்திக்கக் கந்தசாமி தயாரானார்.

காலையில் தொடங்கியது பயணம். இப்போது மாலை பொழுது நெருங்கியது.

கடைசியில், மனித நடமாட்டம் அதிகம் இல்லாத ஒரு பகுதியில் ஒரு குடிசை. அதன் வெளிப்புரத்தில் ஒரு முதியவர் குடிசையின் வெளிப்புரத்தை சுத்தம் செய்த வண்ணம் இருந்தார். அவரை சந்திக்க ஒருவர் காத்திருப்பதைக்கூட அவர் கவனிக்கவில்லை.

சற்று பொருத்து, விவசாயி கந்தசாமி தான் வந்திருப்பதை அந்த முதியவருக்கு அறிவித்தபடி கேட்டார், நான் ஞானியை காணமுடியுமா, என்று. (வீட்டை சுத்தம் செய்பவரை வேலையாளாக புரிந்துகொண்டார்) சுத்தம் செய்யும் வேலையாளை, ஞானியாக எப்படிக் கொள்வது?

தனது வேலையிலிருந்து சற்று விடுபட்டு முதியவர் பதில் சொன்னார்.

ஞானியை ஏன் காணமுடியாது? நமது ஒவ்வொரு உயிரிலும் உள்ளேயும் ஒருவரல்ல. உள்ளே எத்தனையோ வகையான மனிதர்கள் இருக்கிறார்கள். நல்லவர், பொல்லாதவர், சிற்பி, கலைஞன், நடிகர், பாடகர், கொலையாளி, மருத்துவர், கொடையாளி, ஞானி, யோகி, ரோகி, ஏமாளி, கோமாளி, வல்லவர் திருடர், கொள்ளைக்கார், என்று பல ஆயிரம் ஆயிரம் பேர். நம்மில் அனைவரும் ஒளிந்தே உள்ளார்கள்.

நாம் பிறந்த சமுதாயம், வாழும் சூழ்நிலை, கற்ற கல்வி, பெற்ற அறிவு, ஆகியவை நம்மில் ஒளிந்துள்ள பல ஆயிரக்கணக்கான முகங்களில் ஒரே ஒரு முகத்தை மாத்திரம் பெறுகிறோம்.

நாம், வாழ்க்கையை புரிந்து கொள்ள முயற்சி செய்ய வேண்டும். சுய பச்சாதாபம், பேராசை, பொறாமை ஆகிய தீய எண்ணங்களை மனதிலிருந்து அறவே ஒழித்து விட வேண்டும். வாழ்க்கையின் போராட்டங்களைக் கண்டு ஓடி ஒளியாமல், துணிவுடன் எதிர்கொண்டு நல்வழியில் நடந்தால்,

நீங்கள் உங்களில் ஒளிந்திருக்கும் ஒரு ஞானியை கண்டுபிடித்து வெளியே கொண்டுவரலாம்.

வெளியில் தேடுவதை விட்டுவிட்டு உங்கள் உள்ளே ஒளிந்திருக்கும் ஞானியை தேடுங்கள் என்று பதிலளித்தவர், தன் வீட்டை சுத்தம் செய்யும் வேலையில் மீண்டும் ஈடுபட்டார்..

கந்தசாமிக்கு பல விஷயங்கள் புரிந்தது.

முதலாவது, தான் கண்டது ஒரு வேலையாள் இல்லை. மாறாக தாம் தேடிவந்த ஞானிதான் என்பது. இரண்டாவதாக, சுய பச்சாதாபத்தை ஒழிப்பது அவசியம். வாழ்க்கையின் கட்டாயங்களை நிமிர்ந்து எதிர்கொள்வது வெற்றியைத் தரும். எதை எதை தவிர்க்க வேண்டியதோ அவைகளைக் கண்டறிவது. அதோடு நம்முள் ஒளிந்திருக்கும் ஞானியைக் கண்டுபிடித்து, வெளியே கொண்டு வரவேண்டும். உங்களுக்குப் புரிந்ததா?

## 3 . 5 எளிமே

## கதை 03: எல்லோருமே பயணிகள்தான்.



எளிமையானவரைத் தாழ்ந்தவராகக் காணும் பிரச்சினை இல்லாத ஊரும் இல்லை, மக்களும் இல்லை. அதற்காக ஒரு

கதையை படிக்கலாம்.

ஒரு முறை கீழைநாட்டு கலாசாரம் முக்கியமாக, மதங்களைப்பற்றி நேரில் கண்டு கேட்டு அறிய சில அமெரிக்கப் பேராசிரியர்கள் தங்கள் மாணவர்களுடன் ஜப்பான் சென்றார்கள். அங்கிருந்த புகழ்பெற்ற ஒரு புத்தமத ஞானியை பேட்டிகாணச் சென்றார்கள்.

ஞானி தங்கிய இடத்தில் சோபா முதலான இருக்கே வசதிகள் இல்லாதது கண்டு அதிர்ச்சி அடைந்தார்கள். சிறிதும் பழக்கம் இல்லாமல் தரையில் உட்காரவேண்டிய கட்டாயம். அவர்கள் இயலாமை. ஒரு பிரபல ஞானியாக அறியப்பட்டவரிடம் வசதியாக உட்கார  சோபா கூட இல்லாதது இவர்களுக்கு அதிசயம்.

ஏனென்றால், இவர்கள் எளிமையை ஏழ்மையாகப் பார்க்கும் மக்கள். ஞானியை நோக்கி, சோபா போன்ற இந்த சிறிய வசதிகள் கூட உங்களிடம் ஏன் இல்லை என்று கேட்டதற்கு, ஞானி பதிலுக்கு,  நீங்களெல்லாம் உங்களுடைய சோபாவை ஏன் கொண்டு வரவில்லை என்று கேட்டார்.

“நாங்கள் இப்போது பயணம் செய்கிறோம், நிரந்தரமாக இருப்பதற்கு இங்கே வரவில்லையே, அதனால் தான் நாங்கள் சோபாவை எடுத்துக் கொண்டு வரவில்லை” என்று பதிலளித்தார்கள்.

ஞானி பதில் தந்தார். “இப்போது உங்கள் கேள்விக்கு பதில் தருவது எனக்கு வெகு சுலபமாகி விட்டது” என்று ஆரம்பித்தார்.

“நானும் உங்களைப்போல ஒரு பயணிதான். இந்த உலகத்தில் நிரந்தரமாக இருப்பதற்காக வரவில்லை. அதனாலேயே நான் சோபா முதலான பொருள்களை வைத்துக்கொள்ளவில்லை” என்றார்.

இது எப்படி?

பெரிய மனிதரென்றால் கார், பங்களா போன்ற வசதிகள் இருக்கவேண்டும் என்ற ஒரு எதிர்பார்ப்பு! எளிமையில் யாருக்கும் விருப்பமோ அல்லது அதனால் கிடைக்கும் சுகத்தில் நம்பிக்கையோ இல்லை, ஆனாலும், உலகெங்கிலும், இன்றும் என்றும் மாமன்னர்களும், பெரும் செல்வந்தர்களும் தலைவணங்குவது (வங்கியில் ஒரு சாதாரண சேமிப்பு கணக்கு ஒன்றுகூட இல்லாத) ஒரு கோவணாண்டியை, அதாவது, துறவிகளைத்தான்.

இந்த அத்தியாயத்தில் உங்களுக்கு பல உண்மைகள் புரிந்திருக்கவேண்டும்.இல்லையானால்கவலைப்படவேண்டாம்., நீங்கள் புரிந்து கொண்டதும், புரிந்து கொள்ளவேண்டியதும். அக்குவேறாக ஆணிவேறாக பிரித்து வேறு ஒரு அத்தியாயத்தில் பார்க்கலாம்.

## 3 . 6. நான் துறவிகளைத் தேடி அலைந்தேன்

நாம் எல்லோரும் (இதை படிப்பவர்களில் பெரும்பாலோர்) ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு தேடலில் ஈடுபட்டிருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட சாமியாரையோ இல்லையென்றால், ஏதோ ஒரு சாமியாரையோ காண விரும்பியிருக்கலாம்.

நாம் வாழும் உலகம், நமக்குப் புதிராக இருக்கிறது. தோல்விகள் தொடரும்போது, உலகம் ஒரு மாயையாகத் தெரிகிறது. அப்படியானால் உண்மை என்ன? நான் யார்? கடவுள் எங்கே? எனக்கும் கடவுளுக்கும் என்ன தொடர்பு. இப்படிப்பட்ட சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ள இந்த கேள்விகளுக்கு பதில் தெரிந்த ஒருவரை தேடியதுண்டு.

உலகமகா யுத்தம் தீவிரம் அடைந்த நேரம். ஐரோப்பா முழுவதும் லட்சக்கணக்கில் மனிதர்கள் உயிர் இழப்பது தொடர்கிறது. நகரங்கள், கிராமங்கள் என்றில்லாமல் பெரும் அழிவுகள். அப்போது பால் பிரண்டன் என்ற ஆங்கிலேயர், ஞானிகளைத்

தேடி இந்தியா வந்தார். காஞ்சி மாமுனிவர் ரமணரை அடையாளம் காட்ட, ரமணரைக்கண்டு தன் ஆதங்கத்தைத் தெரியப்படுத்தினார். இந்தப் போரினால் ஏற்படும் பேரழிவைத் தடுக்க ஞானிகள் உதவ முடியுமா என்று கேட்டார்.

இப்படி பலவித மக்கள் ஞானிகளை அல்லது சாமியார்களைத் தேட முக்கியமாக ஒரு காரணம் இருக்கும். சில சாமியார்களைப் பற்றி நாம் கேட்டு அறிந்த அதிசய சம்பவங்கள். தீராத நோயைத் தீர்த்து வைத்த கதை, சாமியாரை கண்டு வந்த சில நாட்களில் ஒரு ஓட்டாண்டி, செல்வந்தரான கதை.

சில குடும்பங்களில், வீட்டில் ஒரு திருமணமோ அல்லது ஏதாவது ஒரு சுபகாரியமோ நடத்தும் முன், தாம் அறிந்த ஆன்மீக பெரியவர்களைத் தரிசித்து, ஆசிகள் பெறுவதை அவசியமாக கொள்வதுண்டு.

நான் பல வருடங்கள் முன்னால் ஒரு சாலை விபத்தில் தப்பித்தது ஒரு அமானுஷ்ய சமாச்சாரம். அன்று அமானுஷ்யங்களை (மனித சக்திக்கு மீறிய சக்திகளை அறிய ஆவல் கொண்டு அதைத் தெரிந்து கொள்ள ஞானிகளை, துறவிகளைச் சந்திக்க அலைந்ததுண்டு. தாடி வைத்தவர்கள் பலர் பின்னால் சுற்றியதுண்டு. சில ஞானிகளுடன் சண்டையிட்டதுண்டு. சிலரிடம் ஆசிகள் பெற்றதுண்டு. எனது வாழ்வில் சில அமானுஷ்யமான அனுபவங்கள் அன்றும், இன்றும் நடப்பது சகஜம். இவைகள் எனது ஆன்மீகத்தைப் பற்றி அறிய வாழ்வின் பெரும் பகுதியை செலவழிக்க முக்கிய காரணங்களாக அமைந்தது.

அந்த அனுபவங்கள் சுவையானவை. பயனுள்ளவை. அன்று தேடியதெல்லாம் கிடைத்துவிட்ட மகிழ்ச்சியில், உலகவாழ்க்கையில் மீண்டும் குதிக்க, ஒரு மாதிரியாக பல வருடங்கள் ஓடியது. திடீரென்று, மீண்டும் ஆன்மீக ஆராய்ச்சியில் ஈடுபாடு திரும்ப அதில் கிடைத்த சில அனுபவங்களின் சாரத்தை உங்களுக்குச் சொல்லப்போகிறேன்.

## 3 . 7. துறவி எப்படி இருப்பார்?

எனது ,ஆரம்ப கால தேடல்களில் தாடி, காவி உடை (அல்லது பல்வேறு மதங்களை சேர்ந்த குருமார்கள் அணியும் உடைகளை) உடுத்திய மக்கள் முக்கியமானவர்கள்.

கல்கத்தாவில் தக்ஷினேஸ்வர் பகுதியில் ஒருநாள், சாதுக்களைப்போல தோற்றமளித்தர்களுடன் பேசும்போது நான் காணவிரும்பிய சாதுக்களை ஒருவிதமாக விளக்கமாக சொன்னதும், அவர்கள் அப்படிப்பட்டவர்களை போலீஸ் பிடித்து சிறையில் அடைத்துவிட்டதாக தெரிவித்தனர். (கஞ்சாவிற்கும் ஆட்களை நான் தேடுவதாக புரிந்து கொண்டார்களோ) !

காவி துணிகள் நம் நாட்டில் ஒரு உயர்ந்த மதிப்பை பெற்றுள்ளது. காவி நிறம் மாத்திரமே மனிதனை துறவியாக மாற்றாது என்று எனது தேடல்களின் ஆரம்ப காலத்தில் தெரியாது. தோய்க்காத வெள்ளை துணிகூட காலப்போக்கில் காவி நிறமாக மாறலாம் அன்று எனக்கு புரிய வாய்ப்பு இல்லை.

பல சமயங்களில் இந்தியாவுக்கு வந்த வெளிநாட்டு சுற்றுலா பயணிகள், காவி உடை அணிந்து, பிச்சை எடுக்கும் சோம்பேறி மனிதர்களை, கோவில் அருகில் கண்டு, இவர்களையும் துறவிகளாக கணக்கிடுவதும் உண்டு.

திமிருக்கும் தன்னம்பிக்கேக்கும் மிக மெல்லிய இடை வெளிதான் உண்டு, அதே போல ஞானியின் அமைதிக்கும் சோம்பேறியின் சலனமில்லாமைக்கும் வெளிப்படையாக தெரிவது மிக மிக சிறிய இடைவெளிதான்

எனக்கு சில உண்மைகள் புரிய அதிக காலம் தேவைப்பட்டது.

(1) துறவிகள் காவி உடைதான் அணிந்திருக்க வேண்டும் என்பதில்லை.

(2) சில உண்மை சாமியார்கள் உடையே அணிவதில்லை ! நூறு

ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த சதாசிவ பிரும்மேந்திரர், இந்த வகை துறவியில் ஒருவர்.

பின் வரும் பக்கங்களில், உடை இல்லாததினால் நிகழ்ந்த ஒரு உண்மை நிகழ்ச்சி (சதாசிவ பிரும்மேந்திரர் ) ஒன்றையும் தெரிந்து கொள்ளலாம்.

(உடையினால் ஒரு சாமியாருக்கு நிகழ்ந்த போராட்டம் ஒன்றையும் (கற்பனை கதை), பத்து வருட உழைப்பை பஞ்ச காலத்தில் மக்களின் நலனுக்கு செலவிட்ட சாமியாரைப் பற்றி (உண்மை நிகழ்ச்சி) படிக்க நான் எழுதிய ஜென் கதைகள் என்ற புத்தகத்தை புரட்டவும் .)

## 3 . 8. துறவியும் தாடியும்.

தாடியை வைத்துக் கொள்வதாக, நாம் சொல்லுவோம். உண்மை என்னவென்றால் தாடியை யாரும் வைத்துக் கொள்ளுவதில்லை. அது தானாகவே வளரும் அதை நம்மில் சிலர் மொத்தமாக மழித்து எறிகிறோம், வேறு சிலர் வித விதமாக வெட்டுகிறார்கள். சிலர் வெட்டுவதில்லை..

ஒரு சிலர் தங்கள் மத நம்பிக்கையின் அடிப்படையில் தாடியை மாத்திரமோ, அல்லது தாடி மீசை இரண்டையும் மழிப்பதில்லை.

நகரத்தில் பலவேறு தொழிலில் ஈடுபட்டிருக்கும் பெரும்பாலன மக்களுக்கு தாடி மீசையை மழிப்பதற்காஒ ஒரு கட்டாயம் அல்லது அவசியம் உள்ளது. இவர்களில் வேண்டுதல்கள், சடங்கு, சம்பிரதாயங்கள் என்ற காரணங்களுக்கு சிறிய காலம் வரை முகம் மழிக்காமல் இருக்க ஒரு அனுமதி உண்டு.

ஆனால், இதைப்போல கட்டாயம் சுய தொழில் செய்பவருக்கு இல்லை. முக்கியமாக துறவிகளுக்கு எந்த வித கட்டாயமும் இல்லை. .அதற்கான நேரத்தை உபயோகமாக செலவழிக்க அவர்களுக்கு பல தேவைகள் உண்டு. எனவே எல்லாவற்றையும், உலகத்தையே துறந்தவர்கள், தாடியை மாத்திரம் தங்கவைத்து

விட்டார்கள். மற்றபடி தாடிக்கும் ஆன்மீகத்திற்கும் சம்பந்தம் இல்லை என்று கண்டுபிடிக்க எனக்கு பல வருடங்கள் தேவைப்பட்டது.

## 3 . 9. துறவியல்லா துறவிகள்

தக்ஷிணேஸ்வர் என்ற இடம். ஒரு அழகான ஆன்மிக அமைப்பு. அதன் தலைவர், அமெரிக்காவிலிருந்து இறக்குமதியான ஒரு சாது. ஒரு சிரித்த, சாந்தமான முகம்கொண்ட மனிதர். அவரிடமிருந்து நான் கற்றது மிக முக்கியமான ஒரு பாடம். அவரைப்போன்ற மனிதர்கள் பலர் துறவியல்லாத் துறவிகள். பொருள்வாழ்க்கையிலிருந்து முழுவதும் விடுபடாமல், துறவியின் குண நலன்களுடன், மக்கள் மத்தியில் தங்களை உடை தோற்றம் மற்றும், அலங்காரங்களால் தங்களை தனிப்படுத்திக்கொண்ட பலரை நாம் காணலாம்.

புத்தர், யேசு, ராமகிருஷ்ண பரஹம்ஸர், விவேகானந்தர் போன்ற மகான்கள் ஒருவரின் சிந்தனைகளில் தமது மனதைப் பறிகொடுத்து, தானே ஒரு இயக்கம் தோற்றுவித்து அல்லது அவ்வாறு ஏற்கெனவே தோற்றுவிக்கப்பட்ட இயக்கங்களில் அங்கமாகி விடுவார்கள்.

அதாவது குறிபிட்ட மகான்கள் தந்த செய்திகளை மக்களிடையே பரப்புவதில் இவர்கள் உதவுகிறார்கள். இவர்களை மகான்களின் கொள்கை பரப்பும் செயலர்கள் என்று அழைப்பதும் சரியானது. இவர்கள் நல்ல இதயம் கொண்டவர்கள். நலிந்தவர்களுக்கு மற்றும் எளியவர்களுக்கு சேவை செய்வதில் அதிக ஈடுபாடு உடையவர்கள்.

இங்கே கவனிக்க வேண்டிய ஒரு வித்தியாசமென்னவென்றால், மேலே கண்ட இருவகை துறவிகள் ஒரு விவசாயிக்கும் ஒரு (காய்கறி, மற்றும் பலசரக்கு) கடைக்காரருக்கும் உள்ள

வித்தியாசம் தான். முதலாமவர் உற்பத்தி செய்கிறார். மற்றவர் வினியோகம் செய்பவர். சிலகாலம் உற்பத்தி செய்பவரே வினியோகம் செய்வதும் உண்டு.

நாம் முக்கியமாக கருத்தில் கொள்ளவேண்டியது , வினியோகம் செய்பவர்களை உற்பத்தியாளராக நினைக்க கூடாது..

மகான்கள் விட்டுச் சென்ற அறிவுரைகளையும், செய்திகளையும் மக்களிடையே பரப்ப, சில அமைப்புகள் உள்ளன, உதாரணத்திற்கு ராமகிருஷ்ணா மடம் சங்கரமடம், யோகதா சத் சங் போன்ற எண்ணற்ற அமைப்புகள் இயங்குவது நாம் அறிந்ததே.

இவைகள் எல்லாமே, இந்த அமைப்புகளைத் தேடிவரும் மக்களுக்கு ஆன்மீக வழிகாட்டுவது, ஏழை எளியவர்களுக்கு இலவச அல்லது குறைந்த செலவில் தரமான கல்வி கிடைக்கச் செய்வது, மருத்துவ வசதி செய்து தருவது மற்றும் வெள்ளம் முதலான இயற்கை அழிவுகளை ஏற்படுத்தும் நேரத்தில் அவசர சேவையில் தங்களை ஈடுபடுத்திக் கொள்வார்கள்.

மற்ற காலங்களில் பொது மக்களுக்கு ஆன்மீகம், கல்வி, மருத்துவம் ஆகியவற்றில் உதவியும் செய்வார்கள். இவர்களும் திருமணம் செய்து கொள்ளாமல் துறவிகளைப் போல வாழ்வார்கள். ஆனாலும் இவர்கள் துறவிகளிலிருந்து முற்றும் மாறுபட்டவர்கள். இவர்கள்,முக்கியமாக, தேடல்களில் ஈடுபட்டவர் இல்லை.

சீருடை - நகரத்தில் நம்மிடையே நடமாடும் இந்த வகை சாமியாரல்லாத-சாமியார்கள் தம்மை சாதாரண மனிதர்களிடமிருந்து தனிபடுத்திக் கொள்ள, சாதாரணரிடமிருந்து வேறுபட்டவராக தெரிவிக்க, சாதாரண மக்கள் மத்தியில் நாங்கள் ஆன்மீக பாதையில் பயணம் செய்பவராக அறிமுகப் படுத்திக்கொள்ள, இந்த காவி அல்லது அதுபோன்ற சீறுடை

உதவுகிறது.

தொழில் முறையில் காக்கி, நீலம், வெள்ளை உடைகளை நாம் அணிவதில்லையா? அதுபோல இந்த ஆன்மீக (ஆபீஸர்களுக்கு) துறைக்கு காவி உடை, ஒரு சீருடை அல்லது யூனிபாரம் என்று புரிந்து கொள்வோம். பல மதங்களை சேர்ந்தவர்களுக்கு பல்வேறு கலரில் வெவ்வேறு டிசைனில் சீருடை அவ்வளவுதான்.

## 3 . 10 துறவிகளைக் காண்பது எப்படி?

முதலில் நமக்கு நாமே கேட்டுக்கொள்ள வேண்டிய ஒரு கேள்வி துறவிகளை காண நான் ஏன் துடிக்கவேண்டும்?

அடுத்த கேள்வி, நாம் ஓட்டுப்போட்ட மக்கள் பிரதி நிதிகளே நமக்கு பார்த்துப் பேசக் கிடைக்காத போது, நமக்கு சம்பந்தமே இல்லாத துறவி நம் கையில் ஏன் சிக்கவேண்டும்?

நமது மக்களுக்கு ஒரு அளவில்லாத நம்பிக்கை.

ஞானிகள், அதிகாரிகள், முதலாளிகள் (கடவுள் உள்பட) போன்ற பெரிய மனிதர்கள் எல்லோரும் ஒரு விதத்தில் அறிவில்லாதவர்களே. இவர்கள் எல்லோரும் ஒரு கூழைக்கும்பிடு, சில வாழைப் பழங்கள் என்று சில்லரையாக எதையேனும் காட்டியே நமது பெரிய காரியங்களை சாதித்துக் கொள்ளலாம் என்பதுதான் இந்த நம்பிக்கை.

முதலில் இந்த மாதிரியான முட்டாள்தனமான நம்பிக்கைகளைக் கைவிடுங்கள். இல்லையானால் ஏதேனும் ஒரு போலி சாமியாரிடம் சிக்கி, கடைசியில், போலீஸ் ஸ்டேஷனில் நிற்பது தப்பாது.

அப்படி ஒரு நிலமை வராமல் இருக்க நீங்கள் அறிந்து கொள்ள வேண்டியது நிறையவே இருக்கிறது. அதில் சில உடனடியாக, இங்கே, இதோ !

மிக மிக முதிர்ந்த துறவிகளை திடீரென்று மக்களிடையே

காணலாம். சமீபத்தில் நம்மிடையே வந்த சிலரை பற்றி பின்வரும் பக்கங்களில் காண்போம். நிச்சயமாக இவர்கள் மாஜிக் காட்டும் வகையாக இருக்காது.

தவிர பொதுவாக வளரும் துறவிகளுக்கு, மக்கள் மத்தியில் வேலை எதுவும் இல்லை.

உண்மையாகவே துறவிகளை (பொருள் உலகை துறந்த பிறவிகளை) காணவேண்டுமா?

இந்து மதத்தை ஆதாரமாக கொண்ட பல துறவிகளை ஒரே இடத்தில் காண மகாசிவராத்திரி, குருபூர்ணிமா ஆகிய இரண்டு நாட்களில் மட்டும் தில்லியிலிருந்து 6 மணி நேர பிரயாணத்திலுள்ள ரிஷிகேஷ் என்ற இடத்தில் பலரை காணலாம். இன்றும் இமயத்தின் பல பகுதிகளில் சுற்றிதிரியும் பலர் நமது பார்வையில் சிக்குவதாக அங்கே பயணம் செய்தவர் சொல்ல கேட்டதுண்டு.

இதை தவிர, 12 வருடங்களுக்கு ஒருமுறை, கும்பமேளா என்ற நிகழ்ச்சி நடைபெறும் நாளிலே வட இந்தியாவில் உள்ள சில நதிக்கரையில் - எல்லாவித - வண்ண மயமான உடைகளுடனும், உடை ஒன்றுமே இல்லாத சாதுக்கள் வரை அனைவரையும், ஒரே இடத்தில் காணலாம். அன்று நமது நாட்டு மக்கள் மட்டுமல்லாது, உலகத்தின் பல பாகங்களிலிருந்து சுற்றுலாப் பயணிகள் இந்த பகுதிகளை முற்றுகை இடுவதுண்டு.

## 3.11 சாமியார்களை பற்றி மக்களிடையே பரவலான பல (தவறான) எண்ணங்கள்.

நம்ம ஊரைப்போல சாமியார்களுக்கு உள்ள வரவேற்பு உலகில் எந்த பகுதியிலும் இருக்குமா? சந்தேகம்தான். ஏன் அப்படிப்பட்ட ஒரு வரவேற்பு?

கடவுளிடம், இவர்களுக்கு ஏதோ தனிப்பட்ட முறையில்

தொடர்பு இருப்பதாகவும், ஏதோ, அவர்கள் நினைத்தால் மனது வைத்தால் நாம் பதவிகள் பெறலாம், பெற்ற பதவியை இழக்காமல் இருக்கலாம், பொருட்களை குவிக்கலாம். **எல்.கே. ஜி** அட்மிஷனிலிருந்து, பிள்ளை பேறு இல்லாத குறைவரை எல்லாம் தீர்க்கும் சக்தி படைத்தவர்கள்.

எல்லா சாமியாருக்கும் நாம் பொருள் வாழ்க்கையில் வெற்றி பெற செய்ய மந்திரங்கள், மாயங்கள் தெரியும்.

சில சாமியார்களுக்கு இரும்பை தங்கமாக மாற்றும் ரசவாதம் (கெமிஸ்ட்ரி) தெரியும்.

ஓட்டு மொத்தமாக இந்த சக்திகளுக்கு ஒரு பெயர், அமாநுஷ்ய சக்தி. அல்லது சாதாரண மனிதரிடம் இல்லாத ஒரு சக்தி. என்ன விசித்திரமான கற்பனைகள்.??????

ஐயா, சிறிது சிந்தியுங்கள். அமானுஷ்ய சக்திகளை பெற்றவர்கள் எதற்காக வாழ்வில் மொட்டையாகிப் போய், துன்பத்தில் துடிக்கும் மனிதர்களிடம் பொருளை எதிர்பார்த்து நம்மிடையே சுற்ற வேண்டும்? கேயேந்த வேண்டும்.?

## 3 . 12 வளர்ந்த நாடுகளும் இதற்கு விதி விலக்கு இல்லை.

தொழில் விஞ்ஞானம் ஆகியவற்றில் முன்னேறிய அமேரிக்காவில், கடவுளின் அருள் பெற்றவராக தன்னை அறிமுகபடுத்திக்கொண்டு போலியாக (நன்றாக இருப்பவர்களை வைத்து) தீராத வியாதிகளை தீர்க்கும் நாடகம் நடத்தும் வேடிக்கை. . நல்ல உடல் நலம் உள்ளவர்களை, நோய் உள்ளவர்களாக நடிக்க வைத்து, ஆயிரக்கணக்கான மக்கள் முன், கடவுளை வேண்டுவதன் மூலம் குணப்படுத்துவதாக ஏமாற்றி கொள்ளை கொள்ளையாக பணம் சேர்ப்பவர்கள் இருக்கிறார்கள்.

இவர்கள் மக்களை ஏமாற்றுகிறார்கள் என்று சிலர்

ஆதாரங்களுடன் நிரூபித்த பிறகும், ஏமாற்று வேலை தொடர்கிறது. சமீபத்தில் இந்த ஏமாற்று ஆசாமி இந்தியா வந்தார். இந்தியாவிலுள்ள பல பிரபலங்களும், மந்திரிகளும் இந்த ஏமாற்றும் மனிதர் பங்கு கொண்ட விழாவுக்கு வருகை தந்து கௌரவித்திருக்கிறார்கள்.

இந்த ஏமாற்றும் மனிதர் நாடு திரும்பும்போது, ஒரு அதிகாரி (?), விமான நிலையத்தில், மிகுந்த நம்பிக்கையுடன் இந்த ஆன்மீக மேதாவியை வழிமறிக்கிறார். தனது நோயுற்ற உறவினரை, அவரது அற்புத சக்தியை கொண்டு குணப்படுத்தும்படி வற்புறுத்தியிருக்கிறார். அப்படி ஒரு சக்தியே இல்லாத ஏமாற்று பேர்வழி என்ன செய்வார்?

இந்த ஆன்மிகவாதி போலீஸ உதவியுடன் தப்பித்து விமானத்தில் ஏறி தனது நாட்டிற்கு சென்றுவிட்டார் (செய்திதாள்கள், டீ.வி சானல்கள் இந்த நிகழ்ச்சியை தெரிவித்தது).

பேராசை பிடித்தவர்களும், அறிவில்லாதவர்களும் கற்பனையில் மாத்திரமே வளர்த்துக் கொண்ட அமானுஷ்ய சக்திகளை நம்பி அலைவார்கள். இருப்பது எல்லாம் இழந்து, பின்னர் போலீசில் புகார் கொடுத்து என்ன லாபம்?

ஏமாறுபவர்கள் இருந்தால் ஏமாற்றுபவர்கள் இருக்கத்தானே செய்வார்கள்.?

.ஆகவே உடையும் விளம்பரமும் மாத்திரமே அமானுஷ்ய சக்திகளை தராது. எனவே போலிகளையும் கண்டு ஏமாறாதீர்கள்.

## 3 . 13. உண்மையான சாதுக்களிடம் என்னதான் எதிர்பார்க்கலாம்?

அது நல்ல கேள்வி.

சாதாரண மனிதர்களிடம் துளிகூட இல்லாத எந்த விலைக்கும்

கிடைக்காத, விலை மதிப்பு செய்ய முடியாதது, வாங்க முடியாதது என்று எவ்வளவோ உண்டு. ஒன்றுவிடாமல் பின்னால் வரும் பக்கங்களில் பார்க்கலாம்.

அத்தியாயம் 04

# சில சாமியார்கள் உருவான கதைகள்

## அறிமுகம்

ஜாடிக் - வால்டயர் என்ற பிரஞ்ச் அறிஞர் எழுதியதை அடிப்படையாக கொண்ட ஒரு சிறு கதையை தழுவிய கதை ஒன்றைப் படித்தோம். துரத்தும் தோல்விகள்கூட மனிதர்களை மட்டுமல்ல, மாங்காய் மடையர்களைக் கூட மகானாக்கும் என்ற உண்மையைப் புரிந்துகொண்டோம்.

சொந்த பந்தங்களை விட்டு பிரிந்து, ஞானப்பாதையில் கால் வைத்து அறிந்தோ அறியாமலோ பயணம் தொடங்கி, வழியில் குறிக்கிடும் அல்லல்களை பொருட்படுத்தாமல், அரும்பாடுபட்டு தமது இலக்கை அடைந்து, ஞானிகள். என்று அழைக்கப்படுவார்கள்.

முழுமையாக ஞானத்தை பெற்ற அவர்களில் சிலர், மீண்டும் அதே மக்கள் மத்தியில் வந்து, ஏதாவது ஒரு வகையில் அவர்களுடைய துயரங்களை துடைக்க செயல்படுவது சில ஞானிகளின் இலக்கணம்.

நாம் அதிகம் அறிந்த சில மகான்கள் பொருள் பாதையிலிருந்து அருள் பாதைக்கு வரவிருந்த சிறிய நிகழ்ச்சிகளை அலசுவோம்.

இந்த மகான்கள், தங்கள் வாழ்ந்த காலங்களில் நிகழ்த்திய அற்புதங்கள் அதோடு, அவர்கள் இந்த உலகைவிட்டு செல்லும் முறையிலும் வித்தியாச நிகழ்ச்சிகள் இருந்தால், அதையும் காண்போம்.

ஸ்வாமி என்ற அடை மொழி, திருமண பந்தத்தில் சிக்காமல் ஆன்மிகத்தில் உள்ளவருக்கு உரித்தாகும். இதன் மூலம் திருமண பந்தத்தில் இணைந்தவர்களும் கூட ஆன்மிகத்தில் உள்ளது தெளிவாகும். திருமணத்திற்கு பிறகு சந்நியாச வாழ்க்கை மேற்கொண்டவர்கள் கூட ஸ்வாமி என்ற அடை மொழியை பெறுகிறார்கள். (சன்யாசமே மறுபிறவி இல்லையா? கணக்கு சரிதானே.)

இதில் எதுவும் கற்பனை இல்லை.

இங்கே படிப்பது முழுவதும் உண்மையே !

## 4.1. சுவாமி ராமா ஞானியான கதை.



சுவாமி ராமா, தான் ஞானியாக வேண்டும் என்று யாரிடமும் கேட்கவே இல்லை. ஹிமாலய மலை பிரதேசத்தில். அங்கே ஒரு வயதான தாஸ்மான் என்ற வைஷ்ணவர் (கணவன் மனைவி) ஜோடி. இவர்கள் இருவரும். மாதவானந்த சரஸ்வதி என்ற ஞானியின் பக்தர்கள்.

வெகுநாளாக புத்திர பாக்கியம் இல்லாத இந்த ஜோடிக்கு ஒரு மகன் பிறப்பானென்றும், குழந்தைக்கு. இரண்டு வயதாகும்போது

அந்த குழந்தையை தன்னிடம் சேர்ப்பித்து விட வேண்டும் என்று ஆசி வழங்கினார். அது போலவே பிரிஜ் கிஷோர் தஸ்மான் என்ற பிற்கால சுவாமி ராமா தன் குருவை அடைந்தார்.

சுவாமி ராமா, ஞானப்பாதையில் நடை பயின்றபோது, ஹிமாலயத்தின் குகைகளில் தவமிருக்கும் பல ஞானிகளிடம் பாடம் கற்றதை அறிய ஆவலா?

விஞ்ஞானிகளே வியக்கும் அளவு இந்த மெய் ஞானிகள் தற்கால விஞ்ஞானிகளைவிட அதிகமாக விஞ்ஞான அறிவு பெற்றிருப்பதை, தெரிந்து கொள்ள ஆசையா? "லிவிக் வித் ஹிமாலயன் மாஸ்டர்ஸ்" என்ற சுவாமி ராமா அவர்களின் சுய சரிதையைப் படியுங்கள். அதில் பல ஆச்சரியங்கள் காத்திருக்கின்றன. நவீன விஞ்ஞானத்திற்கும் கீழை நாட்டு ஞானிகள் கண்டறிந்தவைகளுக்கும் உள்ள ஒற்றுமையை விளக்கும்.

ஸ்வாமி ராமாவை நான் அறிந்த விதம், அவரை அடைந்த விவரம் எல்லாமே இன்று ஒரு கனவுபோலவே இருக்கிறது, அவரை கண்டு, அவருடன் செலவழித்த அந்த இருபது நிமிடத்தில் நான் கேட்க நினைத்த கேள்விகள் எதையும் கேட்காமல், மௌனமாக, தியானத்தில் ஈடுபட, எனக்கு பதில்கள் எல்லாமே தெரிந்துவிட்ட உணர்வு ஏற்பட, வேறு பேச்சு எதுவும் இல்லாமல் விடை பெற்று திரும்பினேன். இந்த சம்பவம் எனது ஆன்மீக பயணத்தில், ஒரு முக்கிய திருப்பம்.

தனது குருநாதரின் விருப்பபடி, ஸ்வாமி ராமா அமெரிக்கா மற்றும் ஐரோப்பாவில், இந்திய உபகண்டத்தின் செல்வமான யோக அறிவை பிரபலபடுத்தப் பயணமானார். பல வருட காலம் அங்கே தங்கி பல்வேறு மேடைகளில் சொற்பொழிவுகள் நிகழ்த்தி யோகா ஒரு விஞ்ஞானம் என்பதை உலகுக்கு காட்டினார். இது மாத்திரம் இல்லை. தன்னை மருத்துவ மற்றும் உடற்கூறு ஆராய்ச்சி நிபுணர்களிடம் சமர்ப்பித்து, யோக சாதனைகள்

செய்து அதன் மூலமாக யோகாவின் மகிமையை விஞ்ஞான பூர்வமாக நிரூபித்தார்.

தனது வாழ்நாளின் இறுதியில் இந்தியா திரும்பினார். தாம் பிறந்த அதே மண்ணில் பிறந்த பல மக்கள் மருத்துவ உதவிக்காக, தில்லியிலுள்ள பிரபல மருத்துவமனையான சப்தர்ஜங், மற்றும் ஆல் இண்டியா இன்ஸ்டிதியூட் ஒப் மெடிகல் சயின்ஸஸ் - ஐச் சேர்ந்த மருத்துவமனை இரண்டை மாத்திரம் நம்பி இருந்தது அறிந்திருப்பார். இந்த மருத்துவ மனைகளின் வெளியே, நடைபாதையில் (தங்கி சிகிச்சை பெறவேண்டி படுக்கை கிடைக்காத காரணத்தால்) நாட்கணக்கில் நடை பாதையில் காத்திருந்து பலர் இறப்பதை அறிந்திருப்பார் போலும்.

சுவாமி ராமா, ரிஷிகேஷ், என்ற இமயத்தில் அடிவாரமும், புண்ணிய தலமுமாக விளங்கும் இடத்திற்கு அருகே (தேராதுன் விமான நிஏலையத்தை அடுத்து) மிகுந்த நவீன வசதிகள் கொண்ட ஒரு மாபெரும் மருத்துவ மனையையும் அதோடு ஒரு மருத்துவ கல்லூரியையும் நிறுவியுள்ளார். ஏழைகளுக்கு இலவச மருத்துவம், ஏழை நோயாளிகளுக்கு உதவ வந்த உறவினர்களுக்கு மிக சிறிய வாடகையில் தங்கும் வசதியுடன் கொண்ட அமைப்பு இது.

ஞானிகள் தனது ஆன்மீக பயணத்தின் எல்லையை அடைந்தவுடன், திரும்பவும் மக்கள் சேவையில் ஈடுபடுவார்கள் என்ற பொதுவான (கருத்தை) எண்ணத்தை, சுவாமி ராமாவின், இந்த செயல் உறுதி செய்கிறது.

## 4 . 2 புத்தர் ஞானியான கதை

இது பள்ளியில் பாடமாக படித்ததால், நம்மில் பலருக்கு புத்தரையும் அவர் வாழ்க்கையும் நினைவில் இருக்க நியாயமில்லை.

இன்றைய நேபாளத்தில், இயேசு கிறிஸ்து பிறக்க இன்னமும்

சில நூறு வருடங்கள் இருக்கும் போது வாழ்ந்தவர். ஒரு ராஜ குடும்பத்தில் பிறந்து இவருக்கு வழக்கம்போல ஜாதகம் கணிக்கப்பட்டது. குழந்தையின் ஜாதகப்படி, அவர் துறவறம் கொள்வார் என்று தெரிய வந்தது.



பொருள் உலகில் நிலையாக உள்ள எந்த ஒரு பெற்றோரும் தனது புத்திரச் செல்வத்தை பொரியியல் நிபுணராக, மந்திரியாக, ராஜாவாக பார்க்க விரும்புவார்கள். நிச்சயமாக ஒரு துறவியாக இல்லை.

துறவி என்றால் ஏதோ அவசியத் தேவைகள் எதுவும் கிடைக்காமல் இயற்கையின் இடையூறுகளுக்கு இரையாகி மிகுந்த துன்பத்துடன் வாழ்ந்து மடிவார்கள் என்று ஒரு தவறான பயம். (இதுவும் மாயையின் வேலைதான்).

**துறவியை பற்றி இப்படி சொல்லும்போது, ஒரு பழைய கதை ஒன்றை, (பெர்ஷியாவில் உருவானது) நிச்சயமாகச் சொல்லவேண்டும்.**

## கதை - ஏழை மன்னரும், செல்வந்தரான ஒரு துறவியும்.

**ஒ**ரு பக்கீர், (நம்ம ஊரில் ஒரு சாதுவுக்குச் சமம்) புனித தினமாகக் கருதும் வெள்ளியன்று நடைபெறும் பிரார்த்தனைக்காகப்

பள்ளிவாசலுக்குச் செல்கிறார்.

அந்த நாட்டின் அரசனும் அதே தினம், பள்ளிவாசலில் ஒரு சிறப்புப் பிரார்த்தனை செய்கிறார். தனக்கு படைபலம், செல்வம், பெரிய சாம்ராஜ்யம் எல்லாம் கிடைக்க வேண்டும் என விசேஷமாக பிரார்த்தனைகள் செய்கிறார். பிரார்த்தனையின் முடிவில் ஏழை எளியவருக்கு உணவு, துணி முதலானவைகளை தன் அதிகாரிகள் மூலம் மன்னர் அளிக்கவிருக்கிறார்.



பக்கீரும் அன்று பள்ளிவாசலில் தொழுதுவிட்டு வெளியேறுகிறார். மன்னர் அளித்த பரிசுகளை வாங்க வரிசையில் நிற்குமாறு அதிகாரிகள் வற்புறுத்துகிறார்கள். மன்னரின் இலவசங்களைப் பெற்றுக்கொள்ள பக்கீர் மறுக்கிறார். கோபம் அடைந்த காவலாளிகள், இவர் அரசரை அவமரியாதை செய்து விட்டார் என்ற குற்றத்தை சுமத்தி, அரசன் முன் நிறுத்தி புகார் செய்கிறார்கள்.

பக்கீர் சொல்கிறார், “நான் என்னைவிட ஏழ்மையில் இருப்பவர்களிடம் இருந்து நான் யாசகம் பெறுவதில்லை”. இதை கேட்ட மன்னர் திடுக்கிடுகிறார். பக்கீர் விளக்கம் தருகிறார். (நம்ம ஊரில் பக்கிரி என்ற சொல், உருது, மற்றும் அராபிய சொல். பக்கீர், இரண்டும் ஒன்றே தான்) நீங்கள் இறைவனிடம் இது வேண்டும்

அது வேண்டும் என்ற நீண்ட பட்டியல் தந்தீர்கள்.

எனக்கோ ஆண்டவனின் ஒரே ஒரு வேண்டுதல் மட்டுமே தான். அதாவது இறைவனின் கருணை மட்டுமேதான் வேண்டுகிறேன். அதை தவிர வேறு எதுவும் - பொன்னும், மண்ணும், புகழும், பெருமையும், பொருளும் - அவரிடம் நான் வேண்டுவது இல்லை. அவசியமும் இல்லை.

குறைவாக தேவை உள்ள நான், அதிகம் தேவை உள்ள உங்களை விட செல்வந்தனல்லவா?

என்னை செல்வந்தனாக கருதும் நான், உங்களிடம் யாசகம் பெறுவதை குற்றமாக, கருதுகிறேன் என்கிறார். என்ன, ஆணி அடித்த மாதிரி ஒரு லாஜிக்.?

மன்னர் இந்த ஸுபியின் அறிவுரையை நன்றாகவே புரிந்து கொண்டார். இவரை ஆலோசகராக கொண்டு நல்ல மன்னராக மாறி நாட்டை நல்ல விதமாக ஆண்டுவந்ததாக முடிகிறது கதை.

புத்தருக்கு போதி மரத்தடியில் தியானம் செய்யும்போது ஞான ஒளி பிறந்ததாக சொல்லபடுகிறது. புத்தருக்கு ஞான ஒளிவு பெற இந்த மரம்தான் வேண்டும் என்பதில்லை. ஆனாலும் அதை ஏன் பெரிது படுத்துகிறார்கள் என்று புரியவில்லை?

இப்போதைய மக்கள் புத்தர் சொன்னதை காற்றில் பறக்கவிட்டு இந்த மரத்தையே பலர் சுற்றிவருகிறார்கள். இந்த ஞானி மனிதநேயத்தையும் கடந்தவர். எல்லா உயிர்களையும் நேசிப்பவர். ஆகவே வேதங்களில் காணப்படும் உயிர் பலியை வெறுத்தார். அதனால் உயிர் பலி இல்லாத சமய வாழ்க்கை, வழிபாடுகள் கொண்ட பாதையை உருவாக்க பௌத்த (சமண மதமும் தான்) மதம் தோன்றியது. (இன்று மாமிசம் உண்ணும் பௌத்தர்கள் பலரை நாம் அறிவோம்).

ஒரு நண்பர் கேட்டார். புத்தரின் உபதேசம் அவ்வளவு பிரமாதமாக ஒன்றும் இல்லையே ?!

ஐயா, அதன் எளிமையே அதன் சிறப்பு. புத்தரின் உபதேசங்களை பாமரனும் அறிந்து பயன் பெறலாம் இல்லையா?

## 4 . 3. செயிண்ட் பேட்ரிக்

இந்த துறவி ஆன்மீகப்பாதையில் செல்லக் காரணமானது, அவர் கடத்தப்பட்டு, அடிமையாக அண்டை நாட்டில் விற்கப்பட்ட ஒரு துயரமான சம்பவம்.

இவருடைய வாழ்க்கை வரலாறு, பலத்த சர்ச்சைக்கு உள்ளானது. அது நமக்கு அவசியம் இல்லை. பெரும்பாலோர் நம்புவதை நாம் ஆதாரமாகக் கொள்ளலாம். இவரின் வாழ்க்கை வரலாறு ஒரு மிக முக்கிய, பயனுள்ள உண்மையை நமக்கு உணர்த்தும். (நம்முடைய) மிகவும் பாதகமான சூழ்நிலையை நமக்கு சாதகமாக மாற்றிக் கொள்ளலாம் என்பதே! இவரது வாழ்க்கையைப் போற்ற, இது ஒன்றே போதுமானது.

இந்த ஐரோப்பியர்களின் – அதாவது – வெள்ளை மனிதர்களின் சரித்திரமே அலாதி. கடல் கொள்ளை, அடுத்த நாட்டை சூரையாடுவது. ஆயுத பலத்தைக்கொண்டு சமாதானமாக வாழ்பவரை அடக்கி ஒடுக்கி, ஓரம்கட்டி அவர்களின் செல்வங்களை கொள்ளை கொள்வதும், அயல்நாடுகளில் புகுந்து, அதன் மக்களை, நாட்டை அடிமைப் படுத்துவது, அடக்கி ஆள்வது, தங்களின் மதத்தை கட்டாயமாக புகுத்துவதும், இதெல்லாம், இவர்களின் இடைவிடாத உலக சாதனைகள்.

வளர்ந்த நாடுகள் சில வளர்ந்து கொண்டே இருக்க செய்யும் தந்திரம் புதியதல்ல, நமது நாட்டைப்போல மற்ற மூன்றாம் உலக நாடுகளில் உள்ள பதவி ஆசை, பண வெறி பிடித்த தலைவர்களை வளைத்துத் தன் கட்டளைக்கு உட்படுத்தி வருகிறது, அவர்கள் மூலம், அந்தந்த நாடுகளில் அவசியம் இல்லாத பொருட்களையும் ஆயுத தளவாடங்களையும் கொள்ளை விலைக்கு விற்பது,

இதை உறுதி செய்ய அடுத்துள்ள நாடுகளுடன் போர்களை நிரந்தரமாக உருவாக்குவது போன்ற தந்திரங்களை கடைபிடித்து ஆள்வது அவர்களது சிறப்பு..

விலங்கின நியதியை இன்று வரை மாறாது கடைபிடிக்கும் ஒரே இனம் இவர்கள் தான்.

உலக சரித்திரம் இன்று புத்தகமாகவும் இண்டெர் நெட் மூலமாகவும் படித்து தெரிந்து கொள்ளலாம். உலக சரித்திரத்தில் இவர்களின் சாதனைகளை ஆராய்ந்தால் மேலே குறிப்பிட்ட (பிறநாடுகளிலிருந்து) கொள்ளையடிக்கப்பட்ட விலை உயர்ந்த செல்வங்கள், கணக்கில்லா கொலைகள், மற்றும் சுரண்டல்கள் மாத்திரமே கிடைக்கும்.

பதினாறே வயதான சிறுவனை வீட்டிலிருந்து கடத்தி, அடுத்துள்ள ஐர்லாந்தை சேர்ந்த ஒரு ஆட்டு மந்தை உரிமையாளாருக்கு விற்கப்படுகிறார். அந்த சிறுவன்தான், பிற்கால செயிண்ட் பேட்ரிக்.

விற்கப்பட்டவர், ஆடு மேய்ப்பதற்காக ஒரு மந்தை ஆட்டுடன் மலை உச்சிக்கு அனுப்பப்பட்டார். தாங்காத குளிரில், ஆட்டோடு ஆடாக, மனித வாசனை இல்லாமல் தவிக்கும்போது, மனதில் இரண்டு வழிகள் தோன்றும். முதல் வழி, சுய பச்சாதாபம் கொண்டு, அழுது புரண்டு கடைசியாக தற்கொலை செய்து கொண்டு சாவது. இரண்டாவது, இந்தத் தனிமையைப் பயன் படுத்தி, சிறுவயதில், மதகுருவான தன் தாத்தாவிடமிருந்து கற்ற, பழகிய தியானத்தை முழுமையாக மேற்கொள்வது.

சிறுவன் இரண்டாவது பாதையைத் தேர்ந்தெடுத்தார். சுமார் ஆறு வருடங்கள் தியானத்தில் கரைந்தது. பின்னர் ஒருநாள் அவர் மனதுக்குள் ஒரு செய்தி வந்தது. அவர் பயணம் செய்ய ஒரு கப்பல் தயார் நிலையில் உள்ளதாகவும், ஒரு குறிப்பிட்ட திசையில் நடக்கும்படியும் வந்தது உத்தரவு. இப்போது 22

வயதான இளைஞன், அந்த செய்தியைப் பின்பற்றி இருநூறு மைல்கள் நடந்து ஒரு துறைமுகத்தை அடைந்தார்.

ஒரு கப்பல் காத்திருந்தது. கப்பலில் ஏறினார். உடையே இல்லாத அவரை யாரும் தடுக்கவில்லை. கப்பல் இங்கிலாந்தில் சொந்த ஊரின் அருகிலுள்ள ஒரு துறைமுகத்தை அடைந்தது.

வீட்டை அடைந்தவருக்கு ஒரு அதிர்ச்சி. இவர் காணாமல் போனது பற்றி யாரும் கலங்கியதாகத் தெரியவில்லை. இவர் திரும்பியதில் எவரும் மகிழ்ச்சி அடைந்ததாகவும் காணப்படவில்லை. மனிதரின் மனம் உடைந்திருக்க வேண்டும்.

இந்த முறை அவரை யாரும் கடத்தவில்லை. தானாகவே அயர்லாந்தை அடைந்தார், கிறித்தவ மதத்தை தனி ஆளாக பரப்பினார் (அது சரியா தவறா என்பது நாம் இங்கே ஆராய்வதற்கு இல்லை. அவரை பொருத்தவரை அது மக்களுக்கு செய்யும் ஒரு சேவை. அதனால் விளையும் கலாசார குழப்பங்களையும், இதர உப விளைவுகளையும் தீங்குகளையும் பற்றி அவர் அறிந்திருக்க நியாயமில்லை. (அறிந்திருந்தாலும் நாம் கவலைப் படுவதிற்கில்லை).

யோகா மற்றும் மூச்சுபயிற்சிகள் கீழைநாடுகளில் தோன்றியது. இது மனித உடலை ஆரோக்கியமாக வைக்கும். இதை இந்த வெள்ளையர்கள் நாட்டில் உள்ள ஆலயங்கள் மற்றும் மதத் தலைவர்கள் தடை செய்வார்கள். ஏனென்றால், இது அவர்களின் மத நம்பிக்கைகளுக்கு புறம்பானது என்ற காரணத்தோடு!

மனிதர்களின் ஆரோக்கியத்தைவிட மத நம்பிக்கைகள் முக்கியமானதா? விவாதத்திற்கு ஏற்ற ஒரு கேள்வி. கல்வி அறிவு என்றால் எழுத படிக்க தெரிந்திருப்பது மாத்திரம் என்று இருவதாவது நூற்றாண்டிலும் நாம் நம்புகிறோம். அது உண்மையானால் அந்த காலத்தில் எவரும் கல்வி அறிவு பெறாத அயர்லாந்து நாட்டின் பெரும்பாலான மக்களை எழுதப்படிக்க

செய்வித்தார். அது மிகப் பெரிய தனி மனிதர் சாதனை இல்லையா?

அவர்களைக் கொண்டு பல ஆயிரம் பைபிள் கைப் பிரதிகளை தயாரித்தார். (இதனால் அயர்லாந்து மக்களுக்கு என்ன லாபம் என்று கேட்கக் கூடாது). இந்த சாதனையை வைத்து, அவர் ஒரு சிறந்த கல்வியாளராக கொண்டாடப் படுகிறார். இதனால் பல கிறித்தவ பள்ளிகளுக்கு இந்த துறவியின் பெயர் சூட்டப்படிருக்கிறது என்று கருதுவோர் உண்டு.

## 4.4. ரமண மகரிஷி

இவரின் வாழ்க்கையைப் புரட்டும்போது நாம் அறிவது, வெங்கடராமன் என்னும் சிறுவன் ஒரு ஞானியாக உருவாகக் காரணமானது, தான் இறந்து போனதைப் போல ஒரு அனுபவம். அதனால் உண்டான பயம் அவரை திருவண்ணாமலைக்கு விரட்டியது. விளைவு, இன்று. உலகத்திற்கு ஒரு ஞானி கிடைத்தார். அவர் ஆன்மீக பாதையில் தேடியது, நான் யார் என்ற கேள்விக்கு, ஒரு நல்ல பதிலை.



அவருடையவாழ்க்கைகுறிப்புகளைகாணும்போது,சிறுவயதிலே அவ்வப்போது, சமாதி நிலையை அடைவதை அறியலாம். கும்ப கர்ணனைப் போன்ற உறக்கம் என்று குறிப்பிடப் பட்டிருப்பது, சாதாரண உறக்கமாக நினைக்க முடியாது.

(என் தந்தையார் பிறவியிலேயே அதிகரத்தஅழுத்தம் கொண்டவர். ஆனாலும், அந்த அதிக ரத்த அழுத்தம் பொதுவாக அவருக்கு எந்த உடல் நல கோளாறுகளையும் ஏற்படுத்தியதில்லை. அதற்கு மாறாக, யோகிகள் பல போராட்டாங்களுக்கு பிறகு அடையும் சில சக்திகள்(????) இவருக்கு இயற்கையாகவே உண்டு. உதாரணத்திற்கு, ஒரு முறை, இந்திய விடுதலைக்கு முன்பு ஒரு சம்பவம். ஆங்கிலேய அரசால் புதுக்கோட்டை (சமஸ்தானம்) யிலிருந்து நாடுகடத்தப்பட்டு, ஐதராபாத் அடைந்தவர் தன் உடலில் இருந்து பிரிந்து வெளியேறி, தன் உடலை தானே கீழே படுத்திருப்பதை கண்டு பயந்து அங்கும் இங்கும் சென்ற அனுபவத்தை எங்களுக்கு சொல்லுவார்.

சிறு வயதில் உடல் சோர்வு காரணமாகவும் அதிக ரத்த அழுத்தம் காரணமாகவும் (நோயால் - என்று சொல்வது பொருந்தும்) அனிச்சையாக, தான் இருக்குமிடத்திலிருந்து வெகுதூரத்தில் நிகழும் நிகழ்ச்சிகளை அருகிலே இருந்து காண்பதைப் போல ஒரு அனுபவம். இந்த அனுபவம், பிற்காலங்களில் தன்னிச்சையாக செயல் படுத்தியதை ஒரே ஒரு முறை நேரில் கண்டிருக்கிறேன்.

ரமணரை பின்பற்ற, அவரை ஞான குருவாக அடைய அமேரிக்கா மற்றும் மேலை நாடுகளை சேர்ந்த மக்கள் கூட்டம் அவர் வாழ்ந்த காலத்தில் அவரை சுற்றி இருக்கும்.

ரமணருக்கு தொண்டர்களாக, பக்தர்களாக பல இடங்களில் இருந்தும் பல தரப்பட்ட மக்கள் வந்த வண்ணம் இருந்தார்கள். இவரது ஆசிரமத்தில், பக்தர்கள், மத்தியில் பல விலங்கினமும் இடம் பெற்றது ஒரு சிறப்பு.

இன்றும் ரமணரின் மறைவுக்கு பல ஆண்டுகள் கழிந்தும் பலநாட்டு மக்களை (சில நூறு குடும்பங்கள்), தமிழ்நாட்டில் உள்ள ஒரு சிறிய ஊரான திருவண்ணாமலையில் காணாலாம். ரமணரின் ஆசிரமத்தில் வெள்ளைத்தோல் மனிதர்கள், ஜப்பானிய, சீன மக்கள் ஆண்கள் குர்த்தா-பைஜாமா அணிந்தும்,

பெண்கள் பொட்டும் பூவும், புடவை சூடிதார் அணிந்தும் சுற்றிவருவதைக் காணலாம்.

அவர்கள் மாலை வேளையில் தமிழில் சிவனைத் துதித்து பாடும் காட்சி சற்று வித்தியாசமான அனுபவம். இவருடைய வாழ்க்கை வரலாற்றை, புத்தகவடிவில் உள்ளதைப் படிக்கும்போது ஆன்மீகம் குறித்து புதிய சில கோணங்கள் தெரியவரும்.

அப்படி ஒன்றும் யோகசித்திகள் போன்ற சக்திகள் தனக்கு இருப்பதாகவோ அப்படி இருந்தாலும் தமது பக்தர்களிடம் காட்டிக் கொண்டதாகவோ குறிப்புகள் இல்லை. தனது அனுபவத்தையும் கற்று அறிந்தவைகள் என்ற வகை அறிவை தமது பக்தர்களிடம் பகிர்ந்து கொண்டார். இவரது வரலாறு, மற்றும் இவர் சொன்ன பல சிறுகதைகள் ஆன்மீகத்தில் கால் வைப்பவர்களுக்கு ஒரு நல்ல அடிக்கல்லாக, அதாவது அஸ்திவாரமாக அமையும்.

இவர் உடலை நீத்தது, முதிய வயதில், புற்று நோய் கண்டதால்.

## 4.5. ஸேஷாத்ரி ஸ்வாமிகள்.



மிகவும் சிறிய வயதிலேயே இறை வழிபாடு, மந்திர உச்சாடானம், பூஜைகள், தியானம் என்று தனது ஆன்மீக பயணத்தை தொடங்கியவர். சிறிய வயதிற்கே உரித்தான விளையாட்டுகளில் நாட்டமோ, அல்லது எந்தவித தீய வழியிலோ இந்தச் சிறுவன்

செல்வதில்லை. வாழ்க்கையின் ஆரம்பமே, அப்படிப் பட்ட சுத்தமான வாழ்க்கை.

ஐந்து வயதில் காஞ்சி (வேத) பாடசாலையில் சேர்ந்து பிறகு, தந்தையாரின் மறைவுக்குப்பின் வழூர் என்ற ஊரில் கல்வியைத் தொடர்ந்தார். தமிழ் மற்றும் சமஸ்கிருத மொழிகளில் இருந்த பல கிரந்தங்கள் முக்கியமாக பகவத் கீதை, உபநிஷதுக்கள், பிரம்ம சூத்திரம் ஆகியவற்றிலும், வேதங்கள், சங்கீதம் முதலானவற்றிலும் தேர்ச்சி பெற்றார். பாலாஜி ஸ்வாமிகள் என்ற வட இந்தியாவை சேர்ந்த ஒரு ஞானிக்கு சிறிய காலம், சீடராக இருந்தார்.

சேஷாத்ரி ஸ்வாமிகள், ரமணரை விட சுமார் பத்து வயது பெரியவர். ரமணர் காலத்தைச் சேர்ந்தவர். ரமணரை உலகுக்குத் தெரிய வைத்தவர் என்ற தனிப் பெருமையும் இவருக்கு உண்டு. இவரை அறிய ரமணரின் சரித்திரத்தில் அனேக குறிப்புகள் உண்டு. இவரும், இவரைப்போல வேறு சில ஞானிகளுக்கும் தொட்டது எல்லாமே (துலங்கும்) தங்கமாகும், என்ற புகழைப் பெற்றவர்கள். (மிடாஸ்-டச், என்ற புகழைப் பெற்றவர்கள்).

## தங்கக்கை ஸேஷாத்ரி.

சுமார் நான்கு வயதுச் சிறுவனாக இருந்தபோது, கோவில் திருவிழா ஒன்றில், தாயுடன் ஷாப்பிங் போனார் சேஷாத்ரி. அங்கே வெங்கலத்தில் கடவுள் சிலைகள், மற்றும் விளக்குகள் விற்கும் கடை ஒன்று. அதிலிருந்த கிருஷ்ணர் பொம்மையை ஒன்றை சிறுவன் விரும்ப, கடைக்காரர் காசு எதுவும் வாங்காமலேயே அன்புடன் தருகிறார். அடுத்த ஒரே நாளில் சுமார் 1000 கிருஷ்ணர் பொம்மைகள் விற்க, இந்த குழந்தையை தொட்டது எல்லாம் துலங்கும் என்று தங்க கை கொண்டவராக அழைக்கிறார். ஸ்வாமிகள் வாழ்ந்த நாட்கள் முழுவதும் இந்த பெயர் கொண்டவராக விளங்கினார்.

நம்ப இயலாத வெளித்தோற்றம். ஞானியை தேடுபவர்கள், கண்முன் இருந்த இந்த ஞானியை அடையாளம் கண்டிருக்க நியாயம் இல்லை. ஏன் தெரியுமா?

பயித்தியக்காரனைப் போல ஒரு தோற்றம் தந்து, எங்கோ ஒரு மூலை முடுக்கில் ஒடுங்கியும், கொட்டும் மழையில் திளைத்தும் காணப்படுவார். பணக்காரர்கள் தரும் உயர்ந்த உணவை மறுத்து, பழைய கஞ்சியை ஏழைகளிடமிருந்தும், பிச்சை எடுப்பவர்களிடமிருந்து கெஞ்சிக் கேட்டு, வாங்கித் தின்பாராம். விலை உயர்ந்த துணிகளை சிலர் பரிசாகத் தரும்போது, அதை உடனே ஏழைகளுக்கு தந்துவிடுவாராம். இல்லை என்றால், கிழித்து அதை மாட்டின் கொம்பில் மாலையாக மாட்டுவதையும், மாட்டின் வாலில் கட்டுவதையும் கண்டவர்கள் உண்டு.

இவர் ஒரு இசைப் பிரியர். பிறர் வேண்டுகோளுக்கு இணங்கி இனிமையாக பாடுவாராம். பாடும்போது அருகில் இருக்கும் பொருள்மீது அதற்கேற்ற தாளம் போடுவதாகவும் அறிகிறோம். சில சமயம் பைத்தியமாகவும், பல சமயங்களில் பைத்தியமாக நடிப்பதாகவும், பலர் நினைப்பதுண்டு.

## அவரை பற்றி கிடைக்கும் வேறு தகவல்கள்

யோகசித்திகள் எனப்படும் சக்திகளையும் கொண்டவர். கடந்த காலத்தில் நிகழ்ந்ததையும், பிற்காலத்தில் நிகழவிருப்பதையும், கூறுவார். நாம் மனதில் நினைப்பதை அப்படியே சொல்வார்.

மிகுந்த பக்தியுடன் அவரை அணுகிய வியாதிகள் பீடிக்கப்பட்டோரை குணமாக்குவதுண்டாம்.

தீயவர்களை தம்மிடம் நெருங்க விடுவதில்லை. நல்லவர்களை நெருங்கி, அவர்கள் விலகிப்போனாலும் விடாது தொடர்ந்து அவர்கள் கையை பிடித்துக் கொண்டு விளையாடுவது வழக்கமாம்.

## சேஷாத்ரி ஸ்வாமிகள் மறைந்த விதம்.

சுமார் நாற்பது ஆண்டுகள் திருவண்ணாமலையில் வாழ்ந்தவர். தனது பக்தர்களிடம், 'நான் புதிய வீடு ஒன்றை கட்டிக் கொண்டு போகலாமா' என்று பல நாட்களாக கேட்டு வந்திருக்கிறார். ஒரு நாள் சரி போகலாம் என்ற பதில், ஒரு பக்தையிடமிருந்து வந்தது. இதைத் தொடர்ந்து ஒருநாள் ஸேஷாத்ரி ஸ்வாமியின் பக்தர்கள் அவருடன் போட்டோ எடுத்துக் கொள்ள விரும்பி, அவருக்கு எண்ணை குளியல் செய்வித்து, புதிய ஆடைகளும் மாலைகளும் அணிவித்து, போட்டோவும் எடுத்திருக்கிறார்கள். அன்று ஆரம்பித்த காய்ச்சல் 41 நாட்கள் தொடர்ந்தது

இறுதியாக உடலைக் களைந்தார்.

## 4.6. சதாசிவ பிரும்மேந்திரர்.

இவர் துறவியாக மாறிய கதை மிகவும் நம்பமுடியாத அளவு எளிமையானது.

இதைவிட தீவிரமான, பற்றி எரியும், பிரச்சனைகளை தலையில் வைத்துக் கொண்டு சம்சாரத்தில் நீந்தும் நாம் எல்லாம் இருக்க, இந்த மனிதன் இவ்வளவு சின்ன விஷயத்திற்காக ஓடிவிட்டாரே என்று நினைக்கத் தோன்றுகிறது. (சம்சாரம் என்ற சொல், குடும்ப வாழ்க்கையைக் குறிக்கிறது).



அப்படி என்ன பிரச்சனை? ஒரு நாள் காலை வேளையிலே இந்த சிறுவனுக்கு ஒரே பசி. “அம்மா, எனக்கு பசிக்கிறது” என்கிறார். பதிலாக தாயார் “இப்போது உன் கல்யாண விஷயமாகத்தான் பேசிக் கொண்டிருக்கிறோம். சற்று பொறு” என்றாளாம். கல்யாணத்திற்கு முன்னாலேயே சாப்பாடு கிடைக்க பிரச்சனை என்றால், பிறகு என்னவாகுமோ என்ற பயமோ, இல்லை கவலையோ, இந்த சிறுவனை ஞானப்பாதையில் சேர்த்ததாக சில குறிப்புகள் சொல்கின்றன.

வேறு ஒரு குறிப்போ, சிறிய வயதில் திருமணமான சதாசிவருடைய மனைவி, சில வருடங்கள் கழித்து, ஒருநாள் பெரிய மனுஷியான செய்திகேட்டு, அன்றிலிருந்து சுமார் 18 வருடங்கள் தீவிர, தியான யோகப் பயிற்சிகளில் முழுகினார் என்கிறது.

அவர் ஒரு அவதூத சன்யாசி, பிறந்த மேனியொடு, அலைந்தே வாழும் வகை.

## சதாசிவர் நிகழ்த்திய சில அதிசயங்கள்.

மதுரையில் சித்திரைத் திருநாள். திருச்சி அருகே காவிரி ஆற்றின் கரையிலே பிரும்மேந்திரர் வருகிறார். சில சிறுவர்கள், இவரை அணுகி, தங்களை மதுரைக்கு, சித்திரை திருவிழாவைக் காண அழைத்துச் செல்ல வேண்டுகிறார்கள்.

ஏன், எப்படி குழந்தைகள் இந்த மனிதரை இனம் கண்டு, மதுரை அழைத்துத்துச் செல்லுமாறு கேட்கிறார்கள்? குழந்தைகளை கடவுளுக்கு ஒப்பிடுகிறோம். ஏன்? அவர்கள் மனதில் களங்கம் ஏற்படவில்லை. வெறுப்புகள் வேரூன்றவில்லை. பிறவியில் நாம் அனைவரும் ஞானிகளே. சிறுவராக இருக்கும்வரை தெளிவான கண்ணாடி போன்றவர்கள். நாம் அவர்களிடம் எப்படி நடந்து கொள்கிறோமோ, அதை அப்படியே பிரதிபலிப்பார்கள்.

இந்த பருவத்தை கடந்து, நாம் குரங்குகளாக மாறிவிடுகிறோம். குழந்தைப் பருவத்தில் இறைவன் படைத்தது போலவே அப்பழுக்கின்றி தூய்மையான உள்ளம் கொண்டதால், நம்மைவிட பிறரை அறியும் சக்தி கொண்டவராக இருக்கிறார்கள். தம்மைப்போன்ற புனித உள்ளம் கொண்ட ஞானிகளுடனான தொடர்பு மிகவும் எளிதில் நிகழ்கிறது.

இந்த ஆற்றங்கரையிலிருந்து சுமார் இருநூறு கிலோமீட்டர் தொலைவிலுள்ளது மதுரை.

இந்த ஞானிகளுக்கு, ஏழைகள், குழந்தைகள் என்றால் அளவு கடந்த கருணை, அதுவும் கடலாக பொங்கி எழும் என்கிறது வரலாறு. உடனே, குழந்தைகளை, தங்கள் கண்களை மூடச் சொல்கிறார்.

உடனே, குழந்தைகள் மதுரையில் இருக்கிறார்கள். சாமியையும், தேவியையும் தரிசிக்கிறார்கள். திருவிழாவைக் கண்டுகளிக்கிறார்கள். இரவு நேரமானதும், அதே ஆற்றங்கரையில் விழித்தெழுந்து தங்கள் வீடுகளுக்கு செல்கிறார்கள். தாங்கள் மதுரையில் திருவிழா கண்ட அனுபவத்தை பெற்றோரிடம் சொல்கிறார்கள்.

பெற்றவர்கள் குழந்தைகள் கூறியதை நம்ப மறுத்தார்கள். ஆனால் குழந்தைகள் நிகழ்ச்சிகளை பற்றிக் கொடுத்த விலாவாரியான விளக்கங்கள், நிகழ்ச்சிகளை நேரில் காணாமல் தரமுடியாது என்று ஒருவாராக பெற்றவர்கள் உணரலானார்கள். எனவே அலறி அடித்துக்கொண்டு ஆற்றங்கரையை அடைந்து அந்த ஞானியை தேடுகிறார்கள், குழந்தைகள் குறிபிட்ட அந்த மனிதரை எங்கும் காணவில்லை.

இந்த மனிதர், தனது கால்கள் கொண்டு சென்ற திசையில் போவதும் பலநாட்கள் மௌனமாக தியான நிலையில் இருப்பதும் ஒரு வழக்கம். ஒரு காலகட்டத்தில், இப்படி ஒரு நிர்வாண சாது

இருப்பதை பெரும்பாலும் மக்கள் மறந்துவிட்டார்கள் என்று சொல்லலாம். அப்போது, ஒரு நாள், தன் நினைவு இல்லாமல் நடந்து கொண்டிருக்கிறார். (அவர் வழக்கமாக உடைகள் எதுவும் அணிவதில்லை). ஒரு முஸ்லீம் (குட்டி) சுல்தானுடைய அந்தப்புரம் வழியே நடக்கிறார். அதை அறிந்த சுல்தானுக்கு மூக்கின்மேலே கோபம். அதனால் அவர்மீது காவலாளிகளை ஏவி விட, காவலாளிகள் சதாசிவ பிரும்மேந்திரருடைய கையை வெட்டி விடுகிறார்கள். கைகள் இரண்டும் துண்டிக்கப்பட்டு, ரத்தம் ஒழுகுகிறது. அப்போதும் எதுவும் நடக்காததுபோல, தன் வழியே நடக்கிறார். அதைக் கண்டு சுல்தானும் அவர் காவலாளிகளும் திடுக்கிடுகின்றனர். பிறகு வெட்டப்பட்ட கைகள் தானாகவே ஒட்டிக்கொண்டது. இதை கண்ட சுல்தானும் அவருடைய காவலாளிகளும் சதாசிவரின் காலில் விழுந்து மன்னிப்பு கேட்க ஒன்றுமே அறியாதவராக தன் போக்கில் போகிறார். (இந்த சம்பவத்தை விளக்கும் கதைகளில் சில வேறுபாடுகள் உள்ளது கவனிக்க தக்கது).

வழக்கம் போல, பல நாட்கள் மக்கள் மத்தியில் காணாமல், திடீரென்று ஆற்றங்கரையில் தியான நிலையில் இருப்பதை சிலர் காண்கிறார்கள். திடீரேன்று ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுக்கிறது. பல நாட்கள் வெள்ளம் நீடிக்கிறது. சதாசிவர் ஆற்று நீரில் மூழ்கிவிடுகிறார். சுமார் மூன்று மாதம் கழித்து, வெள்ளப்பெருக்கு நின்றதும், நிதானமாக எழுந்து தன் வழி போகிறார்.

வேறு ஒரு சமயம், சில தொழிலாளிகள் ஆற்றின் கரையை ஒட்டிய பகுதியில் தோண்டுகிறார்கள். அப்பொழுது ஒரு தொழிலாளியின் மண்வெட்டியின் நுனியில் ரத்தம் காணப்பட. பயந்து சிலர் ஓடி விட்டார்கள். மீதமிருந்த தொழிலாளிகள் எச்சரிக்கையுடன் தோண்டுகிறார்கள். அவர்களுக்கு கிடைப்பது, சதாசிவ பிரும்மேந்திரர். சிறிது நேரம் கழித்து, எழுந்து, நடந்து, மறைந்து விடுகிறார்.

நேரூர் என்ற ஊரில் தனது உடலைக் களைந்துவிடத் தீர்மானித்தார்.

சமாதி எப்படி உருவாக்குவது என்று தன் பக்தர்களுக்கு விளக்கினார்.

அதன்படி மிகப்பெரிய பள்ளம் தோண்டப்பட்டது. பிறகு, அதில் இறங்கி, யோக முத்திரையுடன் அதில் அமர்ந்தார். பிறகு அந்த பள்ளத்தில், விபூதி, மஞ்சள், உப்பு, கற்பூரம் ஆகியவை சுற்றிலும் நிரப்பினார்கள். பிறகு பொடி செய்யப்பட்ட செங்கல் இட்டு நிரப்பட்டது. பிறகு மண்ணைக் கொண்டு மிகுந்த இடம் நிரப்பப்பட்டது.

பிரும்மேதிரர், தான் சமாதியான ஒன்பதாவது நாள் அந்த இடத்தில் ஒரு வில்வ மரம் (செடி) ஒன்று தோன்றும் என்றார். அதோடு காசியிலிருந்து பாண லிங்கம் ஒன்று அங்கே பன்னிரெண்டாவது நாள் வந்து சேரும் என்றார். இரண்டும் உண்மையானது. லிங்கம் சமாதியிலிருந்து பன்னிரண்டு அடிகள் தள்ளி பிரதிஷ்டை செய்யப்பட்டது.

வருடந்தோரும் நிகழும் பிரும்மேந்திரர் ஆராதனை ஆதி சங்கரரின் பிறந்த நாளன்று வருவது ஒரு சிறப்பு.

## 4 . 7.ராமலிங்க அடிகளார் 1823 - 1873.

இந்தப் பின்னாள் ஞானி, தமிழ் நாட்டில் உள்ள சிறந்த சிவத்தலங்களில் ஒன்றான, சிதம்பரம் அருகே உள்ள ஒரு கிராமத்தில் பிறந்தார்.

## திருச்சிற்றம்பலத்தில் ராமலிங்கம்:

பிறந்து சுமார் ஐந்து மாதமே நிறைந்த ராமலிங்கத்தை பெற்றோர் திருச்சிற்றம்பலம் என்று அழைக்கப்பட்ட சிதம்பரம் நடராஜர் கோவிலுக்கு எடுத்துச்சென்றார்கள். அன்று, அர்ச்சகர்

நடராஜருக்கு தீப ஆராதனை செய்யும் போது இந்த ஐந்து மாத குழந்தை அதை கண்டு, உரக்க சிரித்ததாக சொல்லப்படுகிறது.



## படிக்காத மேதை

அடுத்த மாதமே தந்தை மறைந்தார். அதனால் குடும்பம் சென்னையில் வசித்த ராமலிங்கத்தின் அண்ணன் குடும்பத்துடன் இணைந்தது. ராமலிங்கத்திற்கு ஐந்து வயதானதும், அண்ணன் பள்ளியில் சேர்க்க, தம்பிக்கோ பள்ளிப் படிப்பில் சிறிதும் நாட்டமில்லை. தண்டனைகள் எதுவும் பலன் தரவில்லை.

ஐந்து வயது ராமலிங்கம், தனக்கென்று தனியாக அறை ஒன்று பெற்று, அதில் ஒரு கண்ணாடியும் அதன் முன்னால் ஒரு தீபத்தை ஏற்றி வைத்து மணிக்கணக்காக தியானம் செய்துவந்ததாக வரலாறு கூறுகிறது. ஆறுமுகனை ஆராதித்தவருக்கு வழிநடத்த குரு என்று ஒருவர் இருந்ததில்லை என்பது குறிப்பிடத்தகுந்தது. ராமலிங்கம் சன்யாசவாழ்வை ஏற்றபோது அவருடைய வயது 13.

நெருங்கிய உறவில் கட்டாயமாக திணிக்கப்பட்ட திருமணம், பயன் இல்லாமல் ஆனது. பல அதிசயங்களை ராமலிங்கர்

நிகழ்த்தியதாக குறிப்புகள் தெரிவிக்கின்றன. உதாரணம் - எண்ணைக்கு பதில் தண்ணீரில் விளக்கு எரிந்த சம்பவம்.

## புதிய கோவில்:

ஜாதி அடிப்படையில் மனிதர்கள் பிரிந்து இருப்பதையும் அதன் விளைவுகளையும் வெளிப்படையாக எதிர்த்தார். மக்கள் அவ்வளவு எளிதாக ஜாதிகளை விடுவார்களா? மனிதர்கள் எல்லோரும் சமம் என்று சமத்துவம் போதித்தார். கடலூர் - விருத்தாசலம் சாலையில், நெய்வேலி அருகே வடலூர் என்ற சிற்றூரில் ஜாதி-மத வேற்றுமைகள் இல்லாமல் அனைவரும் வழிபட, ஒரு வித்தியாசமான வழிபாட்டு தலம் ஒன்றை நிறுவினார். அது சத்திய ஞான சபை என்று அழைக்கப்பட்டது.

சமத்துவம், தொண்டு ஆகிய இரண்டையும் வலியுறுத்த காதர் சாயபு என்ற ஒரு இஸ்லாமிய அன்பர் உதவியுடன் ஒரு பள்ளியையும் ஒரு பத்திரிகையும் தொடங்கினார். பணம் அதிகாரம் இரண்டும் உள்ள பொல்லாத மக்கள் எதிர்த்தார்கள். இயேசுபிரானையும், தீர்க்கதரசியாரையும் விட்டு வைத்தார்களா என்ன? எந்த ஒரு நல்ல செயல்களையும், பொறுக்காதவர்கள் எல்லா காலத்திலும், உலகின் எல்லா பாகங்களிலும் இருப்பார்கள் இல்லையா?

வள்ளலார் காலத்தில் அப்படி ஒருவர் ஆறுமுக நாவலர் என்ற ஒரு நல்லவர் இருந்தார். இவர் வள்ளலார் மீது. வழக்கு தொடர்ந்தார் வள்ளலாரின் மேலே சொன்ன முயற்சியை முறியடிக்க முயன்றார். அதையும் மீறி வள்ளாலாரோ, விருத்தாசலம் கடலூர் சாலை, மற்றும் பன்ருட்டிசிதம்பரம் சாலைகள் கூடும் இடத்தில், நெய்வேலியை அடுத்த, வடலூர் என்ற ஊரில் ஜாதி சமயங்களை கடந்த ஒரு ஆலயத்தை நிறுவினார்.

இங்கே பக்தர்கள் இறைவனை வழிபடுவது ஜோதி உருவத்தில்.

இதை தவிர வேறு ஆராதனைகளோ சடங்குகளோ கிடையாது. மாமிசம் உண்பவர்களுக்கு மாத்திரம் ஆலயத்தினுள் வந்து வழிபட அனுமதி இல்லை. இதை எதிர்த்து போராட்டம், மூடுவிழா எல்லாமே நடந்தேறியது.

அஹிம்சை மற்றும் புலால் உண்ணாதிருப்பது என்ற இரண்டையும் மக்களிடையே வள்ளலார் வலியுறுத்தி வந்தார்.

## கருணை:

வாடிய செடியை கண்டபோதெல்லாம் வாடினேன் என்ற பாடிய வள்ளலாரின் மனம், மனிதர்கள் ஆடு மாடு என்ற மற்ற உயிர்கள் மீதும் மட்டும் இல்லாமல், அசையாத உயிர்களான செடி கொடிகள் மீதும் எல்லையற்ற அன்பும், அனுதாபம் கொண்ட தன்மை, நமது நாடு கண்ட பல ஞானிகளின் இடையில் தனியாக பிரகாசிக்கிறார்.

அவர் சாப்பிடுவது மிக குறைவு. சில நாட்கள், சில சமயங்களில் சிறிதளவு உண்பார். பலநாட்கள் சாப்பிடுவதில்லை என்று அவரைப் பற்றிய குறிப்புகள் கூறுகின்றன. ஆனாலும், அவர் ஆரம்பித்து, பல நல்ல இதயங்களின் உதவியுடன் வள்ளாலார் தொடங்கிய, பசித்தவர்களுக்கு இலவச உணவு திட்டம், நூறு ஆண்டுகள் கழிந்தும், இன்றும் தொடர்கின்றது.

அவர் இயற்றிய திரு அருட்பா 5818 பாடல்களை கொண்டது. தனது பக்தர்களை ஒரு ஆன்மிக பயணத்தை மேற்கொள்ள அறிவுறுத்தினார் அதன்படி, ஒவ்வொருவரும் ஒரு தனி அறையில் ஒரு விளக்கை ஏற்றி அதன் சுடரில் மனதை நிறுத்தி (தியானம் செய்து), நமக்கு அப்பால் இருந்து ஆட்டிவைக்கும் சக்தியை அறிய அல்லது காண முயற்சி செய்ய வேண்டும் என்பதே அது!

# வள்ளலார் மறைந்த கதை

உலகில் பெரும் சாதனைகள் செய்தவர்கள் வாழ்ந்தகாலம் எப்போதுமே குறைவு.- ஜீஸஸ் - 33 வயது, மகாகவி பாரதி 39 வயது, மார்ட்டின் லூதர் கிங் -39 போன்ற பலர், தங்கள் செய்த சாதனைகள் பெரியதானாலும் வாழ்ந்தகாலம் என்னவோ குறைவுதான்.

வள்ளலார் மறைந்தபோது அவருடைய வயது என்னவோ 51 தான். மறைந்த நாள் பிப்ரவரி முதல் தேதி,. வருடம் 1874.

தனி அறை ஒன்றில் நுழைந்தவர், யாரையும், அந்த அறையின் கதவை 16 நாட்கள் வரை திறக்க முயற்சி செய்ய வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். அப்படியே திறந்தாலும் ஒன்றும் இருக்காது என்றார். அத்து மீறி திறப்பவர்களை என் அப்பன் பார்த்துக்கொள்வான் என்றார். அறையின் உள்பக்கமாக தாழ்ப்பாள் கூட போட்டுக் கொள்ளவில்லை.

இப்படி சொன்னதினால், பல ஊகங்களும் வதந்திகளும் மக்களிடையே பரவியதில் அதிசயம் ஒன்றும் இல்லை. அன்றைய மாவட்ட கலெக்டர் ஒரு ஆங்கிலேயர். தலத்துக்கு வந்தார். வள்ளலார் இறுதியாக நுழைந்த இடத்தை சோதனை செய்வதற்காக. வந்தவருக்கு, ஏதோ ஒரு இனம்புரியாத உணர்வு. அதோடு கதவை திறக்க வேண்டும என்ற எண்ணம் வரவேயில்லை.

அந்நாளில் வள்ளலாரின் சார்பாக தினம் ஏழைகளுக்கு இலவச உணவு வழங்கப்பட்டு வந்தது. அன்றைய உணவுக்கான செலவை தான் ஏற்று, பணத்தை கொடுத்துவிட்டு வந்த வழியே திரும்பினார்.

அதே வருடம், மே மாதத்தில் ஒருநாள், அரசு அதிகாரிகளால் கதவு திறக்கப்பட்டது. அறைகாலியாக இருந்தது. அதுதான் அதிசயம்.

## வள்ளலாரும் அமானுஷ்ய சக்திகளும்:

வள்ளலார் வாழ்ந்த காலத்தில், சில சம்பவங்கள் அவர் கொண்டிருந்த அமானுஷ்ய சக்திகளைத் தெரிவிக்கின்றன.

அவரது உடலின் நிழல், நமது நிழல் போல இல்லாமல், ஒளி ஊடுருவும் வகையாக அமைந்திருந்தது ஒரு அதிசயம்.

தனது வாழ்நாளின் இறுதி வருடங்களில் சிறிதும் சாப்பிடுவதில்லை என்றும் பேசப்படுகிறது.

எண்ணைக்கு பதில் தண்ணீரைக்கொண்டு விளக்கு எரிய வைத்தது போன்ற அரிய செயல்களைச் செய்ததாக குறிப்புகள் உள்ளன.

ஒரு இரவு பயணத்தின் போது, கொள்ளையர்கள் அவர் பயணம் செய்து வந்த மாட்டு வண்டியை மறித்து, தங்களைத் தாக்க எத்தணிக்க, வள்ளலாரின் கை அசைவில் கொள்ளையர்கள் கை அசையாமல் போனது. பின் அவர்கள் மன்னிப்பு கேட்க, கைகள் சரியாகி இருட்டில் மறைந்த ஒரு சம்பவத்தையும் நாம் வள்ளலாரை பற்றிய வாழ்க்கைக் குறிப்புகளில் படிக்கலாம்

## வள்ளலாரும் பாரதியும்

ஜாதியை பெரும் பாடுபட்டு வளர்த்துவரும் அரசியல்வாதிகள் நிறைந்த இந்த நாளில்,  வள்ளலாரும், பாரதியும் கடவுள்தான். பாரதிக்கு முன்னால் ஜாதியினால், ஜாதி அடிப்படையிலான

சமூகத்தின் கேடுகளை விளக்கி, அதனை எதிர்த்தவர் வள்ளலார். ஜாதிகளை ஒழித்திட அறைகூவல் விட்ட, வள்ளலாரை சும்மா விடுவார்களா? வழக்குகளைச் சந்திக்க வைத்தார்கள்.

எத்தனை பாரதி, எத்தனை வள்ளலார் வந்தால் என்ன? ஜாதி, மதங்கள், மொழி, இனம் ஆகியவைகளை ஆயுதமாகக் கொண்டு மக்களுக்குள் பிளவு ஏற்படுத்தி, தாழ்வு மனப்பான்மையை உருவாக்கி, அதன் மூலம் லாபம் அடையும் மக்கள் தலைவர்கள்

ஒருபுரம். ஜாதியின் அடிப்படையில் வேலைக்கு ஒதுக்கீடு என்ற (இதனால் ஏழைகளுக்கு பலன் எதுவும் இல்லை என்று புரியாத மக்கள்) போலி திட்டங்களை காட்டி ஜாதிகளை அழியாமல் காக்க பாடுபடும் தேசீய அளவில் தலைவர்கள் வேறு. ஜாதிகளை காக்க ஜாதிக்கலவரங்கள் அவ்வப்போது நிகழ்த்தும் அரசியல் பிரமுகர்களும் உள்ளபோது, ஜாதிகள் அழியுமா?

அறிவில் குறைந்த மக்கள் பெரும்பான்மையாக இருக்கும் போது வள்ளலாரும், பாரதியும் தோற்றுக் கொண்டே இருப்பார்கள்.

## 4 . 8. காரைக்கால் அம்மையார்

புனிதவதி என்பது பெற்றோர் சூட்டிய பெயர். சிவன் குடும்பத்தை உடைத்த அதே ஒரு மாம்பழம், இவர் இல்லற வாழ்கையை உடைத்து இவர் துறவறத்தை மேற்கொள்ளக் காரணமாகியது.

காவிரிப்பூம்பட்டினம், ஒருகாலத்தில் தற்கால மும்பாய் போல. ஏற்றுமதி, இறக்குமதி என்று வியாபாரத்தால் செழித்த நகரம். அதனால் அந்த நகரம் பெரும் செல்வச் செழிப்புடன் விளங்கியது. அதனால் பெரும் செல்வம் படைத்த பலர் வாழ்வது இயற்கையே.

அந்த காவிரிப்பூம்பட்டினத்தில், பெரும் செல்வந்தருள் ஒருவர் இருந்தார். இறைவனிடம் பக்தியும், ஏழைகளை, துறவிகளை அன்புடன் ஆதரித்து நேர்மையாக வாழ்ந்து வந்தார். இவருக்கு ஒரு தவப்புதல்வி. அவள்தான் புனிதவதி.

பெயருக்கும் ஏற்ற வகையில் அமைந்தாள் இந்தப் பெண். நடக்க ஆரம்பிக்கும்போதே இறை உணர்வு கொண்டவளாக இருந்தாள். அவள் வளர, அவள் இறை சேவையும், பக்தியும் வளர்ந்தது.

திருமணம் செய்யும் காலம் அடைந்ததும், நாகபட்டினத்தில் ஒரு வியாபார குடும்பத்தினர், தங்கள் மகனுக்குப் புனிதவதியைப் பெண் கேட்டு வந்தனர்.

(இந்த குடும்பத்தில் ஆண்களின் பெயர் தத்தன் என்று முடிகிறது. வடமானிலங்களில் 'தத்' என்ற பெயர் கொண்டவர்கள் உண்டு. அவர்கள்தான் அன்றய தமிழகத்தில் சிறந்த வியாபாரிகளாக திகழ்ந்தார்களோ)?

மிக மிக வசதியான அப்பா, தன் ஒரே மகள், தன் அருகிலேயே வாழ்வதை விரும்பினார். எந்த காலத்திலும் பணம்தான் வெல்லும் போலும். மணமகனும் அவன் பெற்றோரும் சம்மதிக்க திருமணம் நிறைவேறியது.

தனது ஊரிலேயே மணமகனுக்கு ஒரு வியாபார நிறுவனம் துவக்கி வைத்துக் கொடுத்து, பெரும் செல்வமும் அள்ளித்தந்தார்.

இல்லற வாழ்வு இனிமையுடன் தொடங்கியது.

புனிதவதி, தன் சிறுவயதில் தொடங்கிய இறை வழிபாடு, அவள் பிறந்த குடும்பத்துக்கே உரித்தான தான தர்மங்கள், இதோடு கணவனின் மனம் நோகாமல் நடந்துகொள்ளும் நல்ல இல்லதரசியாக வாழ்ந்து வந்தாள்.

ஒரு மாம்பழம் ஒரு நல்ல குடும்பத்தை நாசமாக்குமா? அது முடியுமா? புனிதவதியின் வாழ்க்கே, முடியும் என்று நிரூபிக்கிறது. சிவனுடைய குடும்பத்தை உடைத்த அதே மாம்பழம், புனிதவதியின் வாழ்விலும் விளையாடியது எப்படி என்று இப்போது படிப்போம்.

ஒரு நாள் கடையிலிருந்த கணவனிடம், அவன் நண்பர்களோ, அல்லது வாடிக்கையாளர்களோ, தெரியாது, இரண்டு மாம்பழங்களை தந்து, இதைவிட ருசியான மாம்பழம் உலகத்தில் கிடையாது என்று சொல்லி அன்பளிப்பாகக் கொடுத்தனர்.

இந்த மனிதன். தான் உணவுக்கு வரும்போது தன்னுடன் கொண்டு வந்திருக்கலாமே ! இங்கே தான் விதி விளையாடியது. தத்தன்.

தன் தொழிலாளி ஒருவரிடம் இரண்டு மாம்பழங்களையும் தந்து, தனது வீட்டுக்கு அனுப்பிவைத்தான்.

அன்று, என்றும் போல புனிதவதிக்கு ஒரு துறவி யாசகத்திற்கு வரவே, உணவுடன் இந்த இரண்டு மாம்பழங்களில் ஒன்றையும் தந்து உபசரிக்கிறாள். தம்மிடமுள்ள மிக சிறந்த உணவுப் பண்டங்களை விருந்தினருக்கு படைப்பது அன்றய நியதி. மகிழ்ச்சியுடன் உண்டு விட்டு செல்கிறார் விருந்தாளி.

மதிய உணவுக்கு வந்த கணவன், குளித்துவிட்டு உணவுக்கு அமர்கிறான். பிறகு அவன் அனுப்பிய மாம்பழத்தை கொண்டுவர மனைவியிடம் சொல்கிறான். எஞ்சிய ஒரு மாம்பழத்தை தருகிறாள் புனிதவதி. பழத்தின் ருசியில் மகிழ்ந்து இரண்டாவது மாம்பழத்தையும் தரும்படி கேட்கிறான். (மனைவியும் அந்த இனிய பழத்தை ருசித்து மகிழவேண்டும் என்று எண்ணாது, தானே இரண்டையும் தின்ன துடிக்கும் இவன் கணவனா, அல்லது **பெருச்சாளியா?**)

இங்கேதான் சிக்கல் ஆரம்பிக்கிறது. இரண்டாவது பழத்தைத் துறவிக்கு தந்தாகிவிட்டது. கணவனுக்கு இதை தெரிவிக்க ஒரு பயம். (செந்தில் – கவுண்டமணியின் இரண்டு வாழைப்பழ ஜோக் மாதிரி சமாளிக்கவும் மனைவிக்கு தெரியாமல் போனது.).

குற்ற உணர்வுடன் பூஜை அறையில் புகுந்து இறைவனிடம் மன்றாடுகிறாள். மாம்பழம் கொண்டு வருவதற்காக உள்ளே போன மனைவி திரும்புவதற்கு அதிக நேரம் ஆகவே, கணவன் மனைவியைத் தேடி சமயலறைக்கு வருகிறான். அங்கே இல்லை. பின் பூஜை அறையில் மனைவியின் குரல் கேட்கிறது. அங்கே வருகிறான் கணவன்.

அப்பொழுது மனைவியின்கண்களில் கண்ணீரும், அவள் கையில் மாம்பழமும் இருப்பதைக் காண்கிறான். எதுவும் புரியவில்லை. மாம்பழத்தை தின்கிறான். இதன் சுவையோ முதல்

மாம்பழத்தை விட பலமடங்கு அதிகம். எப்படி இந்த மாம் பழம் கிடைத்தது என்று கேட்ட கணவனுக்கு உண்மையில் நிகழ்ந்தது என்ன என்று கூறினாள் மேலும் ஒரு பழத்தை தருவிக்க கேட்டுக் கொண்டான் கணவன். இந்த முறை கிடைத்த மாம்பழம் கணவனின கையில் கிடைத்ததும் மறைந்தது.

கணவனுக்கு இப்போது புரிகிறது. புனிதவதியின் பக்தியினால் நடந்த அதிசயம்தான் என்பது.

ஒரு விதத்தில் பார்த்தால் உண்மையை சொல்லிவிட்டு இரண்டு உதை வாங்கியிருந்தாலும் பரவாயில்லை. இந்த அம்மா, புருசனை புறக்கணித்து, கடவுளை நம்பியதாலோ என்னவோ, கணவனைப் பயம் பற்றிக்கொண்டது. விளைவு, என்னவாயிற்று?

(வேலைக்கு போய் நாலு காசு சம்பாதிக்கும் பெண்ணோடு வாழும்போதே, கணவன்மார்கள் தங்கள் தனி மனித சுதந்திரத்தை இழந்து, பெற்றோரையும் உற்றோரையும் தியாகம் செய்யவேண்டிய கட்டாயத்தில் தள்ளப்படும்போது, கடவுளே பின்னால் நிற்கும் ஒரு பெண்ணிற்கு கணவனாக குப்பை கொட்டுவது அத்தனை சுலபமல்ல என்பதை நாம் அறிவோம். அந்த கணவனும் புரிந்துகொண்டான் போலும் )

இப்போது, மனைவியை கண்டு பயந்தான். பூம்புகாரைவிட்டே ஓடிவிட்டான். சில வருடங்கள் தலைமறைவாக வாழ்ந்து, மதுரையில் ஒரு வியாபாரம் தொடங்கி, வேறு ஒரு பெண்ணை திருமணம் செய்து கொண்டு, பிள்ளை குட்டிகளுடன் வாழ்ந்து வந்தான்.

புனிதவதி, காணாமல் போன கணவனை எதிர்பார்த்து, இறை வழிபாட்டில் காலம் கடத்தினாள். சில வருடங்கள் கழித்து ஒருநாள், கணவன், தன் புதிய மனைவி மக்களுடன் வந்து புனிதவதியின் கால்களில் விழுந்து வணங்கினார்கள்.

இதனால், கணவன் தன்னை கழட்டிவிட்டுவிட்டான் என்று தீர்மானமாக தெரிந்து கொண்டாள். .

இப்போது புனிதவதி, இறைவனிடம் புதிய வேண்டுகோள் ஒன்றை வைத்தாள். “எனது இளமையை, அழகே அழித்துவிடு” என்று.

தீவிர பக்தர்களின் வேண்டுதல்களுக்கு உடனடி செயல்பட காத்திருக்கும் கடவுள், அழகிய புனிதவதியை, எலும்பும் தோலுமாகவும், முதிய உருவம் கொண்டவளாகவும் இறைவன் மாற்றிவிட்டார்.

இவர்தான், காரைக்கால் அம்மையாராக பிற்காலத்தில் மக்களுக்கு அறிமுகமானார்.

## 4.9. காஞ்சிப் பெரியவர்



காஞ்சிப் பெரியவர், பெரியவர், மகா பெரியவர், பரமாச்சாரியார், என்று அன்போடும், மிகுந்த மரியாதையுடனும், பக்தியுடனும் அழைக்கப்பட்டார் காஞ்சியிலுள்ள சங்கர மடத்தின் கடந்த தலைவரான திரு சந்திரசேகர சரஸ்வதி அவர்கள். பல மதப் பெரியவர்களாலும் பெரிதும் மதிக்கப்பட்டவர்.

இன்றும், பல வருடங்களாக காஞ்சி மடத்தை அடுத்து ஒரு பள்ளிவாசல், அதாவது, இஸ்லாமியர்கள் வணங்குமிடம் ஒன்று உண்டு, இந்த இரண்டு மத அமைப்புகளுக்கு இடையே உள்ள நல்லிணக்கம், நட்பு, ஒற்றுமை ஆகியவை உலகெங்கிலுமுள்ள

மதத்தலைவர்கள் கடைபிடிக்க, ஒரு நல்ல உதாரணம்.

கடவுள் விஷயத்தில் என் தந்தையாரைப் போல எனக்கு ஒரு மனப்போக்கு உண்டு. எப்போதாவது மற்ற குடும்ப நபர்களுடன், கோவிலுக்கு செல்வதுண்டு. அப்போது கடவுளிடம் எதுவும் வேண்டுவதில்லை. அதிகம் போனால், தற்போதய நிலமையை தந்ததற்கு நன்றி சொல்லுவோம். அவ்வளவுதான்.

அதேபோல மூன்று முறை, பெரியவரின் முன்னிலையில் (சுமார் 30 அடி தொலைவில்) நின்றிருக்கிறேன். அப்போது என்னுள் ஒரு புதிய சக்தி பாய்வதை உணர்ந்திருக்கிறேன். அவர் அருகில் செல்லவோ, பிரசாதம் வாங்கிக் கொள்ளவோ அல்லது ஆசி பெறவோ என்றுமே முயன்றதில்லை.

பெரியவருக்கு அமானுஷ்ய சக்திகள் உள்ளன. அவசியமில்லாமல் அவர் அதை உபயோகப் படுத்துவததே இல்லை. நிச்சயமாக, தன்னை பற்றி மற்றவர்கள் உயர்வாக நினைக்கவேண்டி உபயோகப்படுத்துவது இல்லை என்பது உறுதி.

அவருடைய தீவிர பக்தர் ஒருவர், வைஷ்ணவர். வயதில் என்னை விட மிகச் சிறியவர். அவர் பெரியவரைப் பற்றி பேசும்போது அவருக்கு உண்டாகும் பக்தி பரவசம் ஒன்றே போதும். அவர் பெரியவரின் அருகாமையில் இருந்து பல நிகழ்வுகளை விளக்குவார்.

ஏழைகள் மீது பெரியவர் காட்டும் அனுதாபமும் கொண்டுள்ள அன்பும் செய்யும் உதவிகளும் அவருடைய பல செயல்களில் வெளிப்படும் என்பார்.

பெரியவருடன் வாழ்ந்து பெரியவரை பற்றி, எளிய இளைஞனான அந்தத் தொண்டன், அனுபவபூர்வமாக அறிது சொல்லிய நிகழ்ச்சிகளைப் பற்றி ஒரு தனி புத்தகமே எழுதலாம்.

அந்தத் துறவியை அருகிலிருந்தும் அனுபவங்களாக அறிந்தும்

கண்டும் கேட்டும் சொல்லும்போது கேட்பவரின் மெய் சிலிர்க்கும். கீழே தந்துள்ள சில உதாரணங்கள், அவருடைய சிறப்புத் தன்மைகளை பிரதிபலிப்பதற்கே.

பொறியியல் நிபுணரான எனது தந்தை கடவுள் இல்லை என்று நாத்திகவாதம் செய்பவரும் இல்லை. கடவுளை எப்படியாவது காக்காய் பிடிக்க கோவில் கோவிலாக ஏறி, கடவுளை அதைத்தா, இதைத்தா. நான் பதிலாக இதை தருகிறேன் என்று கடவுளுடன் காண்ட்ராக்ட் பேசும் ரகமும் இல்லை.

எனது சிறு வயதில், என் தந்தை, உள்ளூரிலும், சில சமயம் வெளியூரிலும் கோவில்களுக்கு எங்களுடன் வந்தது உண்டு. தொடர்ந்து ஓரே ஒரு முறை சில வெள்ளிக் கிழமைகளில் ஒரு வைதிகர் எங்கள் வீட்டிற்கு வந்து மலர்கள் ஊதுவத்தி மணம் கமழ பூஜை செய்து, வடை பாயசம் நிவேதனம் செய்வார்.

அந்த நாளை ஆசையோடு (வடை, பாயசத்தை???) எதிர்பார்த்து காத்திருந்ததும் இன்றும் நினைவில் உள்ளது. அது தவிர தனியாக அவர் வழிபாடுகள் ஆராதனைகள் என்று செய்து நாங்கள் பார்த்ததில்லை.

## புதுக்கோட்டையில் பெரியவர்.:

ஒரு முறை, எனது தந்தை, தான் வேலை பார்த்த வந்த நிறுவனத்தின் தலைவர், அடுத்த ஊரில் இருந்த ஒரு மடத்திற்கு வந்திருக்கும் பெரியவருக்கு, முறையாக மரியாதை செலுத்த எண்ணினார். தனது ஒரு அலுவலரிடம் அந்த பொறுப்பை ஒப்படைத்தார். அப்போது அந்த அலுவலர் பல தில்லு முல்லுகள் செய்து வருவதாக தகவல் வந்தது. அதன் விளைவாக அந்த நிறுவன தலைவர் என் தந்தையை அழைத்து, தனக்கு ஒரு உதவி செய்ய வேண்டிக்கொண்டார்.

என் தந்தை அடுத்த ஊர் சென்று, பெரியவருக்கு மரியாதை

செய்வதற்கான காரியங்களை மேற்பார்வை செய்வதே அந்த உதவி என்று கேட்க,. என் தந்தை அதிர்ந்து போனார். தனக்கு ஆத்திக சம்பந்தமான அறிவு ஒன்றும் இல்லை. எனவே நான் இதற்கு தகுந்த ஆள் இல்லை என்று சொல்லிப் பார்த்தார்.

நிருவனத் தலைவரோ, அதைப்பற்றி எனக்கு கவலை இல்லை. தாங்கள் அங்கே தலத்தில் இருந்தாலே போதுமானது என்று சொல்லி ஒரு பொறுப்பை ஒப்படைத்தார்.

அடுத்த ஊரிலுள்ள மடத்தை அடைந்து. செய்தித்தாளுடன், மடத்தின் வெளியே அமர்ந்திருந்தவரை மடத்திலுள்ள சிப்பந்தி ஒருவர் அணுகி, பெரியவர் உங்களை அழைக்கிறார் என்றார். என் தந்தை உறுதியாக, பெரியவர் இப்போது திருப்பதியில் இருக்கிறார் என்று சொல்லி, சிப்பந்தியுடன் வரமறுத்தார். (என் தந்தையின் நிருவனத் தலைவரையும் பெரியவர் என்று அவர்கள் அலுவலகத்தில் குறிப்பிடுவது வழக்கம்).

மடத்து சிப்பந்தியும் விடுவதாக இல்லை. நிதானமாக, பெரியவர் என்றால் காஞ்சி சங்கராச்சாரியார். அவர் அழைக்கிறார் என்று விளக்கினார். பதிலுக்கு என் தந்தையோ, அவரை எனக்கோ, என்னை அவருக்கோ தெரியாது என்று அடம்பிடிக்க, சிப்பந்தி விளக்கினார். பெரியவர் பூஜையை முடித்துவிட்டார். சற்று நேரம்முன்னால் என்னை அழைத்து, மடத்தின் வாசலில், வெள்ளை தலைமுடியுடன், வெள்ளை வெளேர் என்ற வேட்டி சட்டை, அணிந்து வெள்ளை சிகரெட் வாயிலும், செய்தித்தாள் சகிதம் உட்கார்ந்திருக்கும் ஆளை அழைத்துவா என்று உத்தரவு கொடுத்திருக்கிறார் என்று சொல்ல, சுற்றிலும் அப்படி எவரும் இல்லாததால் ஒரு வழியாக உள்ளே வர சம்மதித்தார். கைகால் கழுவிய பின் பெரியவரின் முன்னால் நிறுத்தப்பட்டார். அப்போது அமர வைத்து என் தந்தையின் பெற்றோரை, பிறப்பிடம் ஆகியவற்றை கேட்டு அறிந்து, உடனே, நீ மதுரை வக்கீல் ஏ.வைத்தியநாத ஐயரின் மருமகன்தானே என்று

பெரியவர் கூறியதும் என் தந்தைக்கு, ஒரு அதிர்ச்சி.

அடுத்த இரண்டு மணிநேரம் இருவரும் பரிமாரிக்கொண்டது, தற்கால விஞ்ஞான முன்னேற்றத்தை பற்றியே. அன்றிலிருந்து பெரியவர் மீது என் தந்தைக்கு ஆத்திகத்தைக் கடந்த ஒரு விஞ் ஞான அறிவுள்ள ஆன்மிகத் தலைவர், ஞானி என்றெல்லாம் பெரிய மரியாதை. அது என்னையும் தொற்றிக்கொண்டது.

## காரைக்குடியில் பெரியவர்:

நான் காரைக்குடியில் 9 ம் வகுப்பு மாணவன். அப்போது அங்கே பெரியவர் வருகை தந்திருக்கிறார். சங்கர ஜெயந்தியோ, அல்லது பெரியவரின் பிறந்தநாளோ நினைவில் இல்லை. (என் சித்தியின் மகன் அந்த சமயத்தில் பிறந்ததால், சந்திரசேகரன் என்று பெயர் வைத்ததாக நினைவு). அதுவரை நான் பார்த்திராத ஒரு கூட்டம். பூஜை முடிந்து, பெரியவர் காத்திருக்கும் பக்தர்களுக்கு தீர்த்தம் வழங்கிக்கொண்டிருக்கிறார். திடீரென்று ஒரு நடுவயது பெண், பெரியவரிடம் கண்ணீருடன் ஓடுகிறாள்.

பெரியவர் அப் பெண்மணியை அமைதிப்படுத்தி அருகே அமரச் செய்கிறார். தீர்த்தம் வழங்குவது தொடர்கிறது. (இந்த பெண்ணின் தாலியை கூட்டத்தில் யாரோ அறுத்து எடுத்திருக்கிறார்கள். அதனால் பதறிப் போய்விட்டாள் இந்த பெண்). கூட்டம் நகர்ந்த வண்ணம் இருந்தது. திடீரென்று தீர்த்தம் கொடுப்பது நின்றது. தன் முன்னால் நின்ற ஒரு வயதில் மூத்த அம்மாளிடம் மெதுவாக, ஆனால் கண்டிப்பாக சொன்னார், எடுத்ததை கொடுத்து விடு. அந்த அம்மாள் மறுத்து ஏதோ பேச, பதிலுக்கு பெரியவர், இது வரை செய்த பாவங்கள் போதாதா என்று கேட்க, அந்த அம்மாள் மடியிலிருந்து தாலிகயிறு, மற்றும் தங்கத்தாலான பாகங்களை உரிமையாளரான பெண்ணிடம் கொடுத்துவிட்டு வேகமாக மடத்தைவிட்டு வெளியேறினாள்.

## இண்டர்நெட்டில் பெரியவரைப் பற்றி:

ஒரு அமைப்பு, வருடா வருடம் மூன்று பண்டிதர்களை தேர்ந்து எடுத்து அவர்களுக்கு பரிசுகள் வழங்குவதும், அவர்களுக்கு மரியாதை செய்வதும் வழக்கம். அதற்கு தேர்ந்து எடுத்த பெயர்களை பெரியவரின் ஒப்புதலுக்கு எடுத்து செல்வதும் அதை அப்படியே அவர் அங்கீகரிப்பதும் பல காலமாக நடந்துவரும் ஒரு செயல். ஒருமுறை. இரண்டு பெயர்களுக்கு ஒப்புதல் அளித்து, மூன்றாவதற்கு, இந்த பெயரும் இருக்கலாம் அல்லது வேறு நான் தேர்ந்தெடுத்த ஒருவராகவும் இருக்கலாம் என்றார்.

விருது வழங்கும் நாள் இன்னமும் ஒருநாள் இருக்க, அந்த மூன்றாவது பண்டிதர் இறைவனடி சேர்ந்து விட்டார். ஒரு அரசு ஆம்பப்பள்ளி ஆசிரியரும், தொழிலதிபரும்.

துறவிகள் பொருள் உலகத்திற்குள் இருக்கும்போது தொடரும் (மற்றவரின்) தொல்லைகளை அளவிட முடியாதுதான். துறவிகள் ஆன்மீக வளர்ச்சி பெற்று, மக்களிடையே ஆன்மீக விழிப்பு ஏற்படுத்த வந்தால், இந்த பணக்காரர்கள் தங்கள் சொந்தமான தொழில் ரீதியான பிரச்சனைகளையும் துறவியின் கழுத்தில் ஏற்றிவிடுவார்கள்.

இதில் ஆன்மீகத்திற்கு துளியேனும் சம்பந்தம் இல்லாமல், காவி உடையுடன், மடத்து தலைவர்களா, அல்லது மடத்தலைவர்களா என்று எண்ணும் வகையில் கமிஷன் அடிப்படையில் இயங்கும் பவர் புரோக்கர்களாக இயங்கும் வகைகளை பற்றியும் நாம் கேட்டதுண்டு.

அரசியல் தலைகள், அவர்களின் ஜால்ராக்கள், அதிகாரிகள், தொழில் அதிபர்கள் என்று விதவிதமான செல்வந்தர்கள் காவி உடை மனிதர்களிடம் ஆதாயம் தேடிசுற்றி வருவதும் புதியதல்ல. நல்ல வகை ஞானிகளில் சிலர், இந்த செல்வமும்

செல்வாக்கும் உள்ளவர் சிலரின் உதவியோடு ஏழைகள் மற்றும் பொதுமக்களுக்கு பல நன்மைகள் செய்து கொண்டிருப்பவர்களும் உண்டு.

ஏழைகளையும் சாதாரண மக்களையும் ஓரம் கட்டிவிட்டு, செல்வந்தர்கள், அதிகாரிகள், அரசியல்வாதிகள் ஆகியவர்களுக்கு மாத்திரமே நேரம் ஒதுக்கும் போலி ஆன்மீக வாதிகளும் உண்டு.

மகாராஷ்ட்ரா மானிலத்திலிருந்து ஒரு தொழிலதிபர், ஒரு மொழி பெயர்ப்பாளருடன் பெரியவரைக்காண வந்திருந்தார். அவருக்கு மத்திய சுங்கம் மற்றும் கலால் வரி சம்பந்தமாக ஒரு பிரச்சனை, அப்போது, பெரியவர் ஒரு ஆரம்பப்பள்ளி ஆசிரியர் தனக்கு தரப்படவேண்டிய ஊதிய உயர்வு கிடைக்கவில்லை என்று பெரியவரிடம் முறையிட்டுக் கொண்டிருந்தார். பெரியவர் அந்த ஆசிரியரோடு அதிகநேரம் செலவழித்தார். அதன் பிறகு வந்த தொழிலதிபருக்கு, பிரசாதம் மட்டும் தந்து அனுப்பி.விட்டார்.

தொழிலதிபருக்கு ஒரே கோபம். சற்று தொலைவு சென்று, மொழி பெயர்ப்பாளரிடம், ஆசிரியரின் சிறிய ஊதிய உயர்வுக்கு அதிக நேரம் செலவழித்த பெரியவர், என்னுடைய பலகோடி ரூபாய் வரி சம்பந்தமாக என் குறையை கேட்க வெகு குறைவான நேரமே செலவழித்தார் என்று கூறினார்.

மொழி பெயர்ப்பாளாரை அருகில் வரச்செய்து, அந்த ஆளிடம் சொல், அவருடைய சில கோடி வரி பிரச்சினையைவிட இந்த ஏழை ஆசிரியரின் ஒரு ரூபாய் ஊதிய உயர்வு சமாசாரம் மிக மிக தீவிரமானதுதான் என்று அவருக்குச் சொல் என்கிறார்.

## மளிகைக் கடை பாக்கி

மடத்தின் தினசரி தேவைக்கு மடத்தை அடுத்துள்ள ஒரு மளிகை கடையில் பத்துவரவு. அதாவது தினம் தினம் வாங்கினாலும் மாதம் ஒரு முறைதான் கடைக்காரருக்கு பணம் கிடைக்கும். காஞ்

சிமடம் அதிக வருமானம் இல்லாத ஒன்று. ஒரு ஏழை மடமாகவே வளர்ந்து வந்திருக்கிறது.

ஒரு முறை பெரியவர் வட மானிலங்களுக்கு யாத்திரை செய்கிறார். மடத்தை விட்டு வெளியேறும் தருவாயில் கடைமுதலாளி, பெரியவர் முன்னால் மரியாதையாக நிற்கிறார். நலம் விசாரிக்கிறார் பெரியவர்.

“ஏதோ பரவாயில்லை. ஆனால் சில மாதங்களாகக் கடைக் கட்டிடத்திற்கான வாடகை தரவே பணம் இல்லை” என்று கூறுகிறார் கடை உரிமையாளர், செட்டியார். மெதுவாக மடம் தரவேண்டிய பணம் குறித்தும் சொல்கிறார். பெரியவரோ, வடநாட்டுப் பயணம் முடிந்து வந்ததும் பாக்கியை கொடுத்து விடுவதாக கூறி விடை பெறுகிறார். மூன்று மாதங்கள் கழித்து திரும்பும்பொழுது. கடை பூட்டப்படிருந்தது. முதலாளி இறந்து விட்டதாகத் தகவல் கிடைக்கிறது. குடும்பம் வேறு எங்கோ இடம் பெயர்ந்துவிட்டது. பல வருடங்கள் உருண்டோடுகின்றன.

காஞ்சியில், ஒரு நாள் மாலை. வழக்கமான பக்தர்கள் கூட்டம். வரிசையில் நின்றிருந்த ஒரு இளைஞனை பெரியவர் குறிப்பிட்டு சிப்பந்திகள் மூலம் இந்த பையனுக்கு ஏற்ற விலை உயர்ந்த பாண்ட், சட்டை துணிகளைத் தருவிக்கிறார். மடத்தின் கணக்கரிடமிருந்து ஒரு பெரிய தொகையை வரவழைத்து, அதோடு பூக்கள், பழங்கள் சட்டை பாண்ட் எல்லாமே ஒரு மூங்கில் தட்டில் வைக்கப்படுகிறது.

அந்த பையன் அருகில் வந்ததும் பெரியவர் ஆசிகளோடு தட்டைத் தருகிறார். ஆச்சரியத்தில் விழிக்கிறான் பையன். இந்த ஏற்பாடுகளை செய்ததோடு கடைசிவரை கவனித்து வந்த மடத்தின் ஒரு சிப்பந்திக்கு ஒரே வியப்பு. பெரியவர், ஏன் இந்த இளைஞனுக்கு பணமும் பொருளும் தருகிறார் என்ற கேள்வி அவர் மனத்தில் தோன்றுகிறது.

மளிகைக் கடைக்கு மடம் பட்டிருந்த கடனை வட்டியும் முதலுமாக திருப்பிவிட்ட மகிழ்ச்சியில். பெரியவர் சிப்பந்திக்கு விளக்குகிறார். வயதில் சிறிய சிப்பந்திக்கு முழுவதாக நம்பிக்கை வரவில்லை. மடத்தின் வாயில்வரை சென்ற இளைஞனை வழிமறித்து அவன் யார் எங்கிருந்து வருகிறான் என்று கேட்க, மளிகைக் கடை முதலாளி இந்த பையனின் தாத்தா என்பது உறுதியாகியது.

சிப்பந்திக்கோ ஒரே ஆச்சரியம். அதைவிட ஆச்சரியம் பெரியவர், தான் இருந்த இடத்தைவிட்டு அகலாமல், சிறிது நேரம் கழித்து சிப்பந்தியை அழைத்து, “நான் சொன்னதில்தான் நம்பிக்கை வரவில்லை. இப்போதாவது சந்தேகம் தீர்ந்ததா” என்று கேட்டார். சிப்பந்தி, பெரியவரின் காலில் விழுந்து தவறு செய்துவிட்டேன் என்று கூறி கதறினார்.

இப்போது சில தமிழில் வெளியாகும் சில ஆன்மீக மாத (வார) பத்திரிக்கைகளில், கடந்த காலத்தில் பெரியவரோடு அருகில் நெருக்கமாக, அல்லது தொடர்பில் இருந்த பலதரப்பட்ட மக்கள் தங்கள் அனுபவங்களை பகிர்ந்து கொள்கிறார்கள். படிந்து அறிந்துகொள்ளலாம்.

## 4 . 11. திருமூலர்

திருமூல நாயனார் ஒரு சைவ சித்தர் என்று (சித்தர்களை பற்றிய குறிப்பை படிக்கவும்).

பெரும்பாலும் சித்தர்களுக்கு ஒரு குரு உண்டு. குரு வழி நடப்பதால், குறைந்த நாட்களிலே தேர்ச்சி பெறமுடியும் இல்லையா? (கரஸ்பாண்டண்டு கோர்சில் எம்.பி.ஏ, படிப்பதற்கும், கல்லூரியில் சேர்ந்து படிப்பதற்கும் உள்ள வித்யாசம் தான்)

இவர் வட இந்தியாவில் பிறந்தவராக எண்ண வாய்ப்புகள் இருக்கின்றன. திருமூல நாயனாருடைய குரு திருநந்தித் தேவர். (இந்த பெயர் தமிழில் திருத்தி அமைக்கபட்டிருக்கிறதோ என்று

ஒரு சந்தேகம்) இவருடைய மாணவர்கள் மொத்தம் எட்டு.

இந்த யோகி, பிற்காலத்தில் தன்னுடைய உடலை இழந்து, வேறு ஒருவருடைய உடலில் வாழ்ந்தவர். அந்த கதையைப் பார்க்கலாமா?

இவரை பற்றிய குறிப்பில் வேதங்கள் அறிந்த முனிவராக குறிப்புகள் கூறுவதை கவனிக்க வேண்டும். அஷ்ட சித்திகள் என்று அறியப்படும சித்துகளை அறிந்தவராக இவரை நாம் அறிவோம்.

பொதிகை மலையில் தவமிருக்கும் அகத்தியரைக் காண தென்னகம் வருகிறார். வரும் வழியில் பல கோவில்களை தரிசிக்கிறார். காஞ்சியில் பல யோகிகளைக் கண்டு உறையாடுகிறார்.



சிதம்பரம் சேர்ந்து, நடராஜரை தரிசித்தபின் திருவாடுதுரையை அடைகிறார். அங்கிருந்து பொதிகையை அடைய வேண்டும். இந்த இடத்திலிருந்து நகர மனமில்லாமல் பொதிகையை நோக்கி நடக்கலானார். சிறிய தூரம் தான் கடந்திருப்பார், காவிரிக்கரை

அருகிலே ஒரு பசுக்கூட்டம் ஒன்று. பசுக்கள் அழுதவண்ணம் இருக்க, நாயனார், அருகில் சென்று பார்க்கிறார். மாட்டிடையன் இறந்து கிடக்கிறான். மாடுகள் இறந்த இடையனை சுற்றிவந்து அழுதவண்ணம் இருக்கின்றன.

(சாதாரண மனிதர்களின் அன்புக்கு ஒரு எல்லை உண்டு, ஆனால் யோகிகள், ஞானிகளின் அன்பின் எல்லை, அவர்கள் முதிர்ச்சி அடையும் போது, அது வெகுதூரம் பரந்து விரிந்து இருக்கும்.

மாடுகளின்தவிப்பைகண்டுமனம்உருகினாரர்.சித்திகளில்தேர்ந்த இந்த துறவி, தனது உடலிருந்து உயிரை விடுவித்து இடையனின் உடலில் புகுந்தார். தனது உடலை பத்திரப்படுத்தினார்.

அந்த மாட்டு இடையர் உயிருடன் எழுந்தால், மாடுகள் மகிழ்ச்சி அடையும். மாடுகளை அதன் அதன் வீடுகளுக்கு சேர்த்து விடலாம் என்று நினைத்தார். மாடுகளின் சோகம் யோகியின் பயணதைத் தடை செய்தது. தன் உயிர், இறந்த இடையர் உடலுக்குள் புகுந்து விட, மறுகணம் மூலன் என்ற பெயர் கொண்ட இடையர் உயிர்த்து எழுந்தார்.

மாடுகள் மகிழ்ந்தன. மீண்டும் புல் மேய விரைந்தன. மாடுகள் திருப்தியாக புல் மேய்ந்து, ஆற்றில் நீரை குடித்து மகிழ்ச்சியாக தமது வீடுகளுள் புகும் வரை காத்திருக்க முடிவு செய்தார். கன்றுகளின் நினைவு வந்த மாடுகள் அருகே இருந்த சாத்தூர் என்ற ஊரில் உள்ள தங்கள் வீடுகளை நோக்கி வழி நடத்தி சென்றன.

கணவன் வருவதற்கு தாமதமாகவே, இடையனின் மனைவி வழியில் காத்திருந்தாள். மாட்டுடன் வந்த கணவனை தொட முயற்சித்தாள். தான் அவள் கணவனல்ல என்று திரும்பத் திரும்ப பலமுறை சொல்லியும் அவள் நம்பவில்லை. வீட்டிற்குச் செல்லாமல், யாத்திரிகர்கள் தங்கும் மடத்தை அடைந்தார்

இடையரின் உடலில் புகுந்த யோகி.

மூலனின் மனைவிக்கு நடந்தது ஏதும் புரியவில்லை. அவளுக்குச் சொன்னாலும் புரிந்துகொள்ளும் அறிவோ, மன நிலையோ இருப்பது சந்தேகம்தான். அழுதாள், கணவனின் விபரீத நடத்தையை ஊர் பெரியவர்களிடம் சொல்லி முறையிட்டாள். வேறு ஒரு பெண்ணுடன் தொடர்பு கொண்டு தன்னை ஒதுக்குவதாக நினைத்தாள்.

புத்திமான்கள் சிலர், மூலனுடன் பேசிப் பரிசோதித்து. மூலன் அப்படிப் பட்டவன் இல்லை. அப்படிப்பட்ட சில்லரைச் சிந்தனைகளுக்கு அப்பாற்பட்டு மூலன் சென்று விட்டதாகவும், சிவனோடு ஐக்கியம் அடைந்து விட்டதாகவும் தெரிவித்தார்கள், சாதாரண மனித நிலையை கடந்து மகா உயர்ந்த நிலையை அவள் கணவன் அடைந்து விட்டதாக தெரிவித்தனர். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை.

அங்கிருந்து விடை பெற்று, தன் உடலை பத்திரப்படுத்தி வைத்த இடத்திற்கு சென்றார். அவர் பத்திரப்படுத்திய உடல் காணவில்லை. இது இறைவனின் விளையாட்டு என்று ஞான திருஷ்டியில் அறிந்ததாக சொல்லப்படுகிறது.

அகஸ்தியரைகாணவந்தஇவரதுதொண்டுதமிழ்மக்களுக்குபயன் தரும் வகையில் அமைந்ததாக இந்த நிகழ்ச்சி சொல்லப்படுகிறது. தொடர்ந்து வந்த அந்த பெண்ணின் உற்றார் உறவினரை ஒரு மாதியாக சமாளித்துவிட்டு, திருவாடுதுறையை அடைந்து திருமந்திரத்தை அருளியதாக வரலாறு தெரிவிக்கிறது.

அவர் திருவாடுதுறையில் சமாதி நிலையில் மூவாயிரம் வருடங்கள் இருந்ததாகவும், ஒவ்வொரு வருடமும் சமாதி நிலையில் இருந்து எழுந்து ஒவ்வொரு பாரா எழுதியதாகவும் சொல்லப்படுகிறது. இதை நம்ப நம்மில் பலர் தயாராக இருக்க மாட்டார்கள். அதைப் பற்றி( திரு) மூலன் கவலைப்

படமாட்டார்.

சமாதி நிலை பற்றி விவரமாக தந்திருக்கிறேன். அதன் பின்னர் சிலர் நம்பலாம். கம்ப்பூட்டர், மற்றும் விஞ்ஞான அறிவு படைத்தவர்களுக்கு இதை புரிந்து கொள்வது மிக சுலபம்.

மூவாயிரம் பாரா எழுதி முடித்ததும், அவர் கைலாயத்திற்கே திரும்பிவிட்டார் என்கிறது இவரது சரித்திரம். பொதிகை மலை, அகஸ்தியர் இரண்டையும் கைவிட்டிருக்கவேண்டும். திருமூலர், பிறப்பில் வடநாட்டை சேர்ந்தவராக இருக்கவேண்டும.

## 4.12. ராகவேந்திரர்



இவர் பெற்றோர் கொடுத்த பெயர் - வேங்கடநாத். இன்றைய தமிழ்நாட்டில், கிருஷ்ணகிரி - ஈரோடு அருகே இருக்கும் புவனகிரியில் பிறந்தவர். திருமணவானவர்.

பிள்ளை குட்டிக்காரர். இவருக்கு ஒரு குரு. ஸுதீந்த்ர தீர்த்தா. குருநாதர், சீடர் வேங்கடநாத்தை, துறவறம் மேற்கொண்டு, மடாதிபதியாக பொருப்பேற்கப் பணித்தார். சீடர், மனைவி குழந்தைகளை அனாதைகளாக்கி விட்டு, துறவறம் கொள்ள விரும்பவில்லை. பணிவுடன், குருநாதரின் கோரிக்கையை நிராகரித்துவிட்டார். ஆனால், மனதில் உதித்த சில காட்சிகள், சில அறிவுரைகள் அவருடைய இந்த முடிவை மாற்றி, சன்யாச

வாழ்கையை மேற்கொண்டார். இவர் காலத்தில் பல அதிசய நிகழ்ச்சிகள் நடத்தியதாக சொல்லப் படுகிறது.

## மிரகிள்ஸ் அல்லது அமானுஷ்ய சக்திகள்:

யோகிகளைபற்றி படிக்கும்போது, நிச்சயமாக, அமானுஷ்ய சக்திகளும் உடனே வரும் இல்லையா? இதோ ராகவேந்திரர் பற்றி சொல்லப்படும் எத்தனையோ அதிசயங்களில், எவ்வளவோ உண்டு. அதில் இரண்டு மாத்திரம், மாதிரிக்காக.

(1) அப்போது முகாலயர்கள் இந்திய மண்ணில் காலூன்றி ஆண்டுவந்த காலம். மசூத்கான் என்ற சிற்றரசன் இன்றைய மந்திராலயம் அமைந்திருக்கும் பகுதியை ஆண்டு வந்தான். இந்த திமிர்ப் பிடித்தவன், இந்த துறவியை நிந்தை செய்வதாக நினைத்து, இனிப்பு, பழங்களுடன் மாமிசத் துண்டங்களையும் கலந்து அனுப்பினான். அந்த தட்டு முழுவதும் மலரும் முந்திரி போன்ற விலை மிகுந்த தின்பண்டங்களாக மாறியதும் பயந்துபோனான் இந்த குருநில மன்னன். காலில் விழுந்து மன்னிப்பு கேட்டதோடு ஒரு வளமான பெரிய நிலத்தை வழங்க முன் வந்தான். ராகவேந்திரர் அதை மறுத்து, தற்போதைய மந்திராலயம் அமைந்த பகுதியை மட்டும் பெற்றுக்கொண்டார்.

(2) இந்த இரண்டாவது சம்பவம் நிகழ்ந்த போது ராகவேந்திரர் ஜீவசமாதி (உயிருடன், தன் விருப்பத்தின் பெயரில் புதைக்கப்படுவதாக சொல்லலாம்) அடைந்துவிட்டார். இந்த சம்பவம் நடந்தபோது மந்திராலயம் பகுதி ஆங்கிலேய ஆதிக்கத்தின் கீழ் வந்துவிட்டது. மடத்தின் அன்றய மடாதிபதி, நஞ்சன்கூடு என்ற இடத்தில் வசித்து வந்தார். ஆங்கில அரசின் சட்டப்படி, இந்த நிலத்தை பெற்றவர் (அல்லது தற்போதைய உரிமையாளர்) வேறு இடத்தில் வசித்தால், மடத்தின் சொத்து ஆங்கிலேயரைத் சேர்ந்துவிடும்.

அன்றைய பெல்லாரி மாவட்ட ஆங்கிலேய கலெக்டர் பெயர்

தாமஸ் மன்ரோ. மந்திராலயத்தில் அப்போது வசித்து வந்த மக்கள், குறுநில மன்சூர் கான், இந்த இடத்தை துறவிக்கு பரிசாக தந்ததால் ஆங்கில அரசின் சட்டம் செல்லாது என்று வாதாடினார்கள். இது மத நம்பிக்கை சம்பந்தப்பட்டது என்பதால், பிரச்சினையை தீர்க்க மன்ரோ தானே, நேரில் வந்தார். மந்திராலயத்தின் உள்ளே நுழைந்த மன்ரோ யாருடனோ ஆங்கிலத்தில் பேசுவதை சுற்றி நின்றவர்கள் பார்த்தார்கள். அவர்கள் கண்களுக்கு அங்கே யாரும் இருப்பதாக தெரியவில்லை. இவர்தானா, நீங்கள் பெரிதும் புகழ்ந்த யோகி என்று கூடி நின்றவர்களை கேட்டார் மன்ரோ.

பெல்லாரியை அடைந்த மாவட்ட கலெக்டர் மன்ரோ, இந்த சொத்து, மடத்தை சேர்ந்தது. இது இப்படியே இருக்கட்டும். எந்த ஒரு மாற்றமும் செய்ய வேண்டாம் என்று அன்றய சென்னை மானில கவர்னருக்கு பரிந்துரைத்தார். இந்த பரிந்துரை கவர்னரை உடனடியாக அடையவில்லை.

எந்த காரணாமாகவோ, இங்கிலாந்து சென்ற மன்ரோ இந்தியா திரும்பியதும், சென்னை மாகாண கவர்னராக நியமிக்கப்பட்டார்.

இப்போது, மடம் சம்பந்தமாக அவர் கையால் எழுதிய பரிந்துரையை, அவரே இப்போது கவர்னர் பதவியிலிருந்து அங்கீகரித்து, மந்திராலயத்தில் மடம் இருந்த இடம் மடத்தின் சொத்துதான் என்று அரசாங்க உத்தரவு ஒன்றை பிறப்பித்தார்.

## 4 . 13. தென் அமெரிக்காவில் சித்தர்கள்

நான் படித்து, கேட்ட வரையில், நமது நாட்டின் தென் பகுதியில், சித்தர்கள் என்று அறியப்படும் ஞானிகள் ஒரு குருவின் கீழ் கற்று, கூட்டாக, ஒரு பல்கலை கழகம் போல செயல்படுவார்கள்.

உலகத்தின் பல பாகங்களில் இது போல கூட்டாக செயல்படும் ஞானிகளின் அமைப்புகள் பல ஆயிரம் வருடங்களாக இருப்பதற்கு பல அத்தாட்சிகள் உள்ளன. உதாரணமாக ஷாமன்

என்ற அமைப்பு. மருத்துவம் பௌதிகம் அல்லாது மெய்ஞானம் அறிதலிலும் செயல்படுவதை அறியலாம். இண்டெர் நெட்டிலும், கார்லோஸ் காஸ்டிநேடா எழுதிய ஆறு புத்தகங்களிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம்.

கார்லோஸ் காஸ்டிநேடா எழுதியதில் சம்பவங்கள் து ஒரு கற்பனையாக இருக்க இடமுண்டு. ஆணால் அதன் கருவானது மெக்ஸிகோ ஆதிக் குடிகளை ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளது என்பது சந்தேகமே இல்லை.

ஒவ்வொரு குழுவிலும், மெய்ஞானம் மட்டுமில்லாது மருத்துவம், விஞ்ஞானம் ஆகியவற்றை அறிவதிலும், ஆராய்வது மற்றும் அதன்மூலம் மக்களுக்கு தொண்டு செய்வதும் வழக்கமாக தெரிகிறது. சித்த மருத்துவம், சித்தர்கள் இரும்பை தங்கமாக மாற்ற வழி அறிந்திருப்பதாக (ரஸவாதம்) உள்ள பரவலான நம்பிக்கை இதற்குச் சாட்சி. சித்த, ஆயுர்வேத மருத்துவம் ரிஷிகள் என்று அழைக்கப்படும் துறவிகளால் உருவானது தானே?

சித்தர் பாடல்களை கொண்ட ஒரு தமிழ் புத்தகம் ஒன்று உள்ளது. தமிழகத்தின் ஞானிகள் இன்றய பஞ்சாப் மானிலத்தில் வசித்த துறவி ஒருவர் மூலம் வட மொழியில் இருந்த புத்தகளிலிருந்த அறிவை பெற்றுவந்து, தமிழகத்தில் பரப்பியதாக அறிகிறோம்.

உலகெங்கிலும் மதங்களாலும் மொழிகளாலும் வாழுமிடங்கள் என்று பிரிந்திருந்தாலும் அவ்வப்போது குறிப்பிட்ட இடங்களில் சந்திப்பது, கருத்துத் பரிமாற்றங்கள் செய்துகொள்வது என்ற வழக்கத்தை பல ஞானிகள் கொண்டிருந்தது பல நூல்களின் மூலம் அறியலாம்.

அத்தியாயம் 05.

# ஞானிகளைப் புரிந்து கொள்வோம்

## 5 . 1 ஞானிகள் என்ன செய்வார்கள் ?

இதைத்தான் செய்வார்கள் என்று குறிபிட்டு சொல்வது கடினம். இதை செய்யமாட்டார்கள் என்று தீர்மானமாக பெரிய பட்டியல் ஒன்று போடலாம்.

குறிப்பாக ஒரு மனிதருக்கோ, பொதுவாக எந்த உயிருக்கும் எப்போதும் எந்த தீங்கும் விளைவிக்க மாட்டார்கள். மனிதரில் நிறம் ஜாதி, மதம், இனம் என்ற பாகுபாடு செய்வதில்லை, எவரையும் எந்த செயலுக்காகவும் வெறுப்பதில்லை. தங்களுக்கு துன்பம் தருபவரையும் வெறுக்காத அளவு நல்ல உள்ளம் கொண்டவர்கள். தீயவரைத் தண்டிக்காதவர்கள் (தங்கள் தூய உள்ளத்தால் நல்லவராக மனம் மாறச் செய்பவர்கள்). நமது சொத்தை அபகரிப்பது, நம்மை ஏமாற்றி லாபம் அடைவது போன்ற எதையுமே செய்யமாட்டார்கள். போதுமா?

முதிர்ந்த ஞானிகள் அனைவரும், கடவுளோ அல்லது கடவுளின் தூதுவர் இருந்தால், அவர் நமது மத்தியில் வந்தால் என்ன செய்வாரோ அதைத்தான் செய்வார்கள் ! புத்தர், காந்தி, அன்னை தெரசா, ஜீஸஸ், தீர்ககதரசியார், மீண்டும் பிறந்து நமது மத்தியில் வந்தால் என்ன செய்வார்களோ, அதுபோலவே

இவர்களும் செயல்படுவார்கள். உயிரை துச்சமாக மதிப்பவர்கள். பயந்தாங்குளிகள் இல்லை. அதே சமயம், தவறான இடத்தில் தலையை கொடுத்து திண்டாடும் ரகமும் இல்லை. நாம் இந்த சூழ்நிலையில் இருந்தால், கீழே வரும் கதைகளில் காணும் ஸுபி ஞானிகளோ, புத்த குருமார்களோ மற்ற கீழைநாட்டு ஞானிகள் செய்ய துணிந்ததை நம்மால் நினைத்து பார்க்ககூட முடியாது.

## 5 . 2. ஆள்பவனுக்கு அறிவு தந்து மக்களுக்கு நன்மை செய்வது.

அந்த காலத்தில் அரசன் ஆள்வதில் ஒரு நன்மை. நல்லதோ கெடுதலோ ஒரே ஒரு ஆளுடன் போகும். இன்று ஒரு நாட்டு மக்களை ஆள எத்தனை மனிதர்கள்? மன்னன் தனக்குள்ள அதிகாரதை தவறாக பயன் படுத்தாமல், மக்களுக்கு நன்மை செய்வதில் செலவிட்டால் மகிழ்ச்சிதான். மாறாக மன்னன் கொடுங்கோலனாகவும், மக்களுக்கு நன்மை செய்யாமல் துன்பம் விளைவித்து கடமையிலிருந்து தவறினால். மக்கள் அவதிப்படுவதைத் தவிர வழி ஏதும் இல்லை. தட்டிக்கேட்டவரின் தலை தரையில் உருளும் அபாயம் வேறு. இது இன்றும் உண்மைதான் இல்லையா?

அந்த நேரத்தில் தன் தலையையும் தக்க வைத்துக்கொண்டு சரியான சமயத்தில், தட்டவேண்டிய இடத்தில் சரியான அளவு தட்டி சரிசெய்யும் பணியை பல ஞானிகள் செய்து வந்ததை சரித்திரம் சொல்கிறது. உதாரணத்திற்கு ஒரே ஒரு கதை.

## கதை 03

## சுல்தானுக்குத் தலைவணங்காத துறவி

இந்த கதையின் காலம் சில நூறு வருடங்களுக்கு முந்தியது. இடம் பெர்ஷியா என்று அப்போது அழைக்கப்பட்ட பிரதேசம். நம்ம ஊரிலுள்ள பல மந்திரிகளைப் போல, அந்த காலத்தில் ஒரு

ராஜா. இருந்தார். அந்த கால கட்டத்தில் இந்த நாடுகள் இஸ்லாமிய மதத்தை தழுவிய அரசர்களால் ஆளப்பட்டது. அவர்களை ஆப்பிரிக்க தேசத்தில் உருவான சுல்தான் (ஆள்பவர், அரசர்) என்ற பட்டத்தால் அழைப்பார்கள்.

சில மன்னர்கள், அடிக்கடி, தனது நாட்டின் பல பகுதிகளுக்கு மாறு வேடத்தில் செல்வார்கள். தமது, அலுவலர்கள் மக்கள் பிரச்சனைகளை கவனிகிறார்களா என்றும் கண்டு அறிவார்கள். மக்கள் குறைகளை நேரில் கண்டறிய செல்வதும் ஒரு காரணம்.

சில சமயங்களில் மன்னர்கள், தங்கள் வரவை அறிவித்து விட்டு பல ஊர்களுக்கு வருவதும் உண்டு. அப்படி வரும்பொழுதெல்லாம், மக்கள் திரளாக கூடிநின்று வணங்கி நின்று வரவேற்பு அளிப்பது வழக்கம்.

மக்களுக்கு நல்லது செய்யும் அரசனுக்கு அன்பால் மற்றும் நன்றி காரணமாக நல்ல வரவேற்பு கிடைக்கும். மோசமான அரசனுக்கும் இது போன்ற நல்ல வரவேற்பு கிடைக்கும், நன்றி விசுவாசத்தால் இல்லை. தண்டனைக்கு பயந்து வரவேற்பு கிடைக்கும்.

இப்படித்தான் ஒரு சுல்தான், நகர்வலம் வந்தார். சிறியவர் பெரியவர் என்று வேறுபாடு இல்லாமல் அனைவரும் வணங்கி நிற்க ஒரே ஒரு ஆசாமி, அதுவும் ஒரு எளிய தோற்றமுள்ள முதியவர், சுல்தானை வணங்காமல், திமிருடன் நின்று பார்க்கிறார். சுல்த்தானை விட அவரை சுற்றி இருக்கும் அதிகாரிகள் மிகவும் கோபமடைந்தார்கள். வீரர்கள் முதியவரை இழுத்துவந்து சுல்தான் முன் நிறுத்த ஒரு வீரன் தனது வாளை உருவி முதியவரின் தலையை வெட்டத் தயாரானான். காவலனுக்கு அவ்வளவு கோபம் அப்போது வராவிட்டால் சுல்த்தானுக்கு அவர்கள் மேல் கோபம் வரலாமே ! (எல்லாம், ஒரு தற்பாதுகாப்புதான்)

அந்த முதியவரை அருகில் வர உத்தரவிட்டான் சுல்த்தான். பயம் ஏதுமின்றி அருகில் வந்தார் பெரியவர். “மன்னனுக்கு மரியாதை

தராதது குற்றம் என்று தெரியாதா" என்று ஒரு அதிகாரி கேட்டார். அது வேறு விஷயம். தலை வணங்கி நிற்பவர்கள் எல்லோருமே மன்னனுக்கு மரியாதை அளிப்பதாக நினைப்பது தவறு. அதிகமான மக்கள், சுல்தானின் செல்வம் அதிகாரம் ஆகியவற்றிற்கும் சுய லாபத்திற்கு தலை வணங்கி நிற்கிறார்கள். அது போன்ற அவசியம் எனக்கில்லை. அதுமட்டுமில்லை என்னை போன்றவர்கள், அடிமைகளுக்கு தலை சாய்ப்பதில்லை. ஏனென்றால் நாங்கள் அடிமைத்தனத்தை வென்றவர்கள்.

பாக்கி எல்லாம் சரி, ஆனால் தன்னை அடிமை என்று குறிப்பிட்டது மாத்திரம் ரொம்ப அதிகமாக பட்டது சுல்தானுக்கு. நான் யாருக்கும் அடிமை இல்லை என்று கத்தினான் சுல்தான்.

கோபம், பயம், ஆசை, தற்புகழ்ச்சி, ஆகியவை சாதாரணமாக எல்லா மனிதர்களையும் எளிதில் அடிமை படுத்திவிடும் அவற்றை நாங்கள் வென்றவர்கள். உங்களைப்போல மனிதர்கள் இந்த

அடிமைத்தனத்திலிருந்து விடுதலை அடையவில்லை. அவர்கள் முன்னால் தலை வணங்குவது எங்களால் இயலாதது என்று தொடங்கியதை முடித்தார்.

இந்த மனிதரின் சிறிதும் பயம் கொள்ளாத மனநிலை, சுல்தானைச் சிந்திக்க வைத்தது. மனதில் தோன்றியதை தயக்கம் இல்லாமல் சொன்னது (ஆமாம் சாமி என்று கோஷமிடும் கூட்டத்தில்) இவரை ஒரு வித்தியாசமான மனிதராகக் காட்டியது.

சுல்தான், உள்ளூர்ப் பெரியவர்களை விசாரித்தபோது, இவர் ஒரு சுபி முனிவர் என்று தெரிந்து கொண்டார். அவரை தனது ஆலோசகராகக் கொண்டு நாட்டை நன்றாக ஆண்டுவந்தார் என்றும், மக்களுக்கு நன்மைகள் செய்து நல்ல பெயரும் புகழுடன் வாழ்ந்ததாக கதை முடிகிறது.

## 5 . 3. அறிரிவத் தைடி வருபவர்களுக்கு சிறந்த முரிறயில் அளித்து விடுவார்கள்.

## கதே 04 சாமுராய்.

அப்படித்தான், ஜப்பானில், போர் வீரனை அழைப்பார்கள். ஒவ்வொரு தொழிலுக்கும் ஒரு தனித்தன்மை தேவைப்படுகிறது. போலீஸகாரர்கள், ராணுவ வீரர்கள் ஆகியவர்கள் முரட்டு ஆசாமிகளாகவும் கரார் பேர்வழிகளாக இருக்கவேண்டும்.

அதிகாரிகள் உத்தரவுக்கு கட்டுப்பட்டு உடனடி செயல் படவேண்டும். சொந்த மூளையை வீட்டில் விட்டுவிட்டு வரவேண்டும். (லீவுக்கு) வீட்டுக்குப்போன பிறகு அவசியப்பட்டால் உபயோகபடுத்தலாம்.

அப்படி இல்லாத ராணுவம் நாட்டிற்கும், போலீஸ் ஊருக்கும் உதவாது. சில சமயங்களில் அதிகாரிகள் தங்கள் உத்தரவில் தவறலாம். வீரர்கள் தந்த உத்தரவை நிறைவேற்றுவதில் தவறக்கூடாது. இதன் காரணமாக பொதுவாகவே இந்த இரண்டு தர மக்களும் மனதில் மென்மை குறைந்து இருப்பதையும் ஒரு முரட்டுத்தனத்தை இவர்கள் பேச்சிலும் நடத்தையிலும் காணலாம்.

ஜப்பானில் உள்ள ஒரு புத்த மடாலயத்தில் ஒரு சாமுராய் - போர்வீரன் வந்து சேர்ந்தான்.

அங்குள்ள தலைமை குருவை தேடி சென்றான். தனக்கே உரித்தான முரட்டுத்தனம் குறையாமல், குருவைக் கேட்டான், “நரகம் சொர்க்கம் எங்கே இருக்கிறது, அதைக் காட்ட முடியுமா”? என்றான்.

சில வினாடிகள் அமைதி காத்த குரு, திடீரென்று சரமாரியாக அந்த வீரனை. அதாவது சாமுராயை திட்டத் தொடங்கினார்.

நீ ஒரு நாத்தம் பிடித்த ஆள், அசிங்கத்தின் மொத்த உருவே நீதான் பட்டியல் நீண்டது. இதை துளியும் எதிர்பார்க்காத சாமுராய், கோபம் மேலிட, தனது வாளை உருவி குருவைக் குறிவைத்தான்.

அப்போது, குரு சொன்னார், **“இதுதான், நரகம் என்பது”.**

இதைக் கேட்ட வீரன் சற்று நிதானித்தான். பின்னர் உருவிய வாளை அதன் உறையில் வைத்தான். அப்போது அவனது கோபம் படிப்படியாக குறைந்தது. குரு நம்மைத் திட்டவில்லை. கோபம் என்பது நரகம் என்று சூசகமாகச் சொல்லுகிறார் என்று புரிந்து கொண்டு, மனம் முழுவதாக சமாதானமானான் அந்த சாமுராய்.

இப்பொழுது குரு தொடர்ந்தார். **“இதுதான் சுவர்க்கம்”**

சுவர்கமும் நரகமும் வேறு எங்கோ இருப்பதாக சில மதங்கள் கூறலாம்.பல கீழை நாட்டு மதங்கள் நமது வாழ்நாளிலேயே அதுவும் இதோ, இங்கே, நமது மனத்திலேயே சுவர்க்கமும் நரகமும் இருப்பதாக உணர்த்துகின்றன.

குருவின் கணிப்பில், எவ்வளவு விளக்கம் கொடுத்தாலும் அனுபவ அறிவு தரும் பலனுக்கு ஈடு இணை இல்லை. ஒருவருக்கு கிடைக்கும் அனுபவ அறிவு, செயல்படும் வேகத்திலும், அது தரும் அறிவின் ஆழத்திலும் நிகரற்றது. ஒரு ஜென் குரு ஒரு போர் வீரனுக்கு அறிவு தர ஒரு வகையில்) தனது உயிரை பணயம் வைத்ததாகச் சொல்லலாம்.

தனக்குச் சேதமில்லாமலும் அதே சமயம் தன்னை அறிவு தேடி அடைந்த சாதாரண மனிதனுக்கு ஏமாற்றம் தராமல், அனுபவ அறிவு தந்து, வெற்றியும் அடைந்தார் குரு, இப்படிப்பட்டவர்கள் ஜப்பானில் உள்ள புத்த மடாலயங்களில் மட்டுமல்ல, உலகெங்கும் உள்ள ஞானிகளிடையே காணப்பட்டார்கள்.

## 5 . 4 துறவிகளின் பரந்த அறிவு, கொடுமையானவர்களையும் எளிதில் வென்றிட உதவும்.

### கதை 05

### ஒரு குரு திமிர் பிடித்த அரசரேப் பெட்டி காண்கிறார்.

மன்னனோ மந்திரியோ, அதிகாரம் படைத்தவர்கள் ஏன் தவறு செய்கிறார்கள்.? ஏன் இறுமாப்பும் திமிரும் கொண்டவராக இருக்கிறார்கள்.? அறியாமை என்று சொல்லலாம். மாயை என்றும் சொல்லலாம்.

ஒரு நாம் அழிவற்றவர்கள் என்று நமது மனதுக்குள் ஒன்று திரும்பத் திரும்ப பொய் சொல்லி ஏமாற்றிக்கொண்டே இருக்கிறது. அதுதான் மாயை. நமக்கு சொல்லிவரும் பொய். அழிவற்ற நமக்கு அளவற்ற பணம் பொருள் வேண்டும். அதில் குறைவு வந்தால் நாம் பசித்து துடித்து வாழும் நிலைக்கு தள்ளப்படுவோம் என்ற பயம். மரணத்தை கண்டு அச்சம்.

மாயை ஒரு திரை. போன்றது. நம்மை உண்மையிலிருந்து மறைத்தே வைத்திருக்கிறது. திரை காற்றில் அசைவதைப்போல சில சாவுகள், கோரமான விபத்துக்கள் நாம் கண் முன்னால் காணும்போது, இந்த மாயை என்கிற திரை சற்றே விலகுகிறது. மனிதன் தன் முன் உண்மை நிலையை காண்கிறான். . உலகே மாயம் வாழ்வே மாயம் எனகிறான்.

சில நிமிடங்களில் திரை மறுபடியும் தன் இடத்தில் வர மனிதன் தன் மாயையில் திரும்பவும் மூழ்குகிறான். ஒரு உண்மையான் நல்ல மனிதரை நீங்கள் கண்டால், அவர் மாயையில் சிக்காத மனிதராகத்தான் இருக்கவேண்டும். (நல்லவர் போல வேடமிட்டு நடமாடும் நய வஞ்கரை கண்டு தள்ளியே இருங்கள்) நமது

கூட்டத்தில் முகமூடிகளுடன் பலர் அலைகின்றார்கள். எச்சரிக்கையாக இருங்கள் கவனமாக இருந்தால் இவர்களை இனம் கண்டு கொள்ளலாம்.

இப்போது கதைக்கு வருவோம்.

புத்த குரு ஒருவர் அடுத்த நாட்டின் எலைக்குள் நுழைகிறார். காவலர்கள் அடையாளம் தெரிந்து கொண்டதால் வணங்கி தமது நாட்டிற்கு வந்தவரை வரவேற்கிறார்கள். ஞானிகள், அறிஞர்கள் கலைஞர்கள் மற்றும் நல்லவர்களுக்கு வரவேற்பு நாடுகளின் எல்லைகளையும் தாண்டியது.

அவர் அந்த நாட்டை வந்தடைந்தது, முக்கிய செய்தியாக பரந்தது. நடந்து வந்த களைப்பைப் போக்க பயணியருக்காகவே கட்டப்பட்ட விடுதியில் தங்கி ஓய்வு எடுக்கிறார். இந்த நாட்டு மூத்த குடிமக்கள் அறிஞர்கள் என்று பலர் அவரை காண விருப்பம் தெரிவிக்கிறார்கள். இதை குரு எதிர்பார்க்காமல் இல்லை. தமது நாட்டில் மட்டுமில்லாது அந்த பகுதியில் தன மேல் கொண்டுள்ள நம்பிக்கையும் அவருக்கு தெரியும்.

ஞானிகளின் மனதில். நாடுகளின் எல்லைகள் குறுக்கிடுவது இல்லை. அவரால் இயன்ற, எதிர்பார்த்த, உதவிகளை என்றும் அனைவருக்கும் செய்து வருவார். இந்த நாட்டை ஆளும் புதிய அரசன் மீது மக்களுக்கு குறைகள் உண்டு என்று அவருக்கு தெரியும்.

நாட்டை ஆண்ட மன்னன், சில மாதங்கள் முன் போரில் காலமானார். அதன்பின் மன்னனின் மகன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். சில நாட்களில் மன்னன் தனது கடமைகளிலிருந்து விலகி வெகுதூரம் சென்று விட்டான்.

உல்லாசம் கேளிக்கை அதுதான் அவனுக்கு தெரிந்தது. நாட்டியம், மது மாது இதுதான் அவன் விரும்பியது. தன் உத்தரவுகளை ஏற்காதவர்களுக்கு தண்டனைகள். அறிஞர்களுக்கு அரசனின்

சபையில் இடமில்லை. மன்னனின் மனதை குளிரவைத்து நாட்டின் செல்வத்தை சுருட்டும் நண்பர்கள் மட்டுமே அரசனுக்கு அருகில் செல்ல முடியும்.

இந்த புத்த குருவைக் காண இந்த நாட்டு பெரியவர்கள், பயணியர் விடுதியில் கூடினார்கள். ஆலோசனைகள் நடத்தப்பட்டன. கடைசியாக, புத்த குரு, தான் தன்னால் இயன்ற வரை முயற்சி செய்வதாக உறுதி கூறியபின் அனைவரும் கலைந்தனர்.

குரு, அரண்மனையை நோக்கிப் பயணமானார். அரண்மனையின் வாயில் காக்கும் காவல்காரனிடம் பேசலானார். “காவலனே, இந்த பயணியர் விடுதியின் மேலாளரை நான் அவசரமாக காணவேண்டும்”. “பெரியவரே, இது அரண்மனை. வழிப்போக்கர் விடுதி இல்லை”. “அய்யா காவலனே, உனக்கு ஒன்றும் தெரியாது” ! இந்த விடுதியின் அதிகாரியை கூப்பிடு. அவருக்கு மட்டும் உண்மை தெரியும்.

பெரியவரே, மன்னன் கோபக்காரர். அரண்மனையை பயணியர் தங்கும் விடுதி என்று சொன்னால் கோபம் கொள்வார்.

இந்த உரையாடல் அரசவையில் இருந்த மன்னனின் செவிகளை ஒற்றர்கள் மூலம் அடைந்தது.

வந்தவர் பேசுவது பைத்தியக்காரனைப் போல இருந்தாலும், அவர் முகத்தில் காணும் பொலிவு அவரை அறிவாளியாகவே காட்டுகிறது என்று செய்தி அனுப்பியவர் அரசனிடம் தெரிவித்தார். எனவே, தானே நேரில் கண்டு வருவதாகக் கூறி மன்னனே அரண்மனையின் வாயிலை அடைந்தான்.

வந்து சேர்ந்த அரசனிடம், “அதிகாரியே, வணக்கம். இந்த வாயில் காவலன் ஒன்றும் அறியாத அப்பாவியாக இருக்கிறானே”! “தங்களின் இந்த வழிப்போக்கர் விடுதியில் ஒருவாரம் தங்கி விட்டு செல்லலாம் என்றால், இது பயணிகள் தங்கும் விடுதியே இல்லை என்கிறானே!.

அரசன், அதில் உங்களுக்கு என்ன சந்தேகம். இது அரண்மனை. அரசர்களின் நிரந்தர குடியிருப்பு. பயணிகள் விடுதியில் மக்கள் இன்று தங்கி நாளை பயணம் செய்வார்கள். இதுவோ, மன்னர்கள் நிரந்தரமாக காலம் காலமாக வாழுமிடம் என்று விளக்கம் தந்தார்.

“அப்படியா? எனக்கு உங்கள் தந்தையின் தந்தையை காட்ட முடியுமா” என்று கேட்டார்.

“அவர் இறந்து பல ஆண்டுகள் கழிந்து விட்டனவே” என்றான் மன்னன்.

“அப்படியானால், உங்கள் தந்தையோ” ? “சமீபத்தில் நடந்த யுத்தத்தில் வீர மரணம் அடைந்துவிட்டார்”, என்று மன்னன் பதில் கூறினார். “ஒருநாள், ஒரு வாரம் என்று இல்லாவிட்டாலும், அரசர்கள் சில வருடங்கள் மட்டுமே இங்கே தங்கிய பின் செல்வதுதானே வழக்கம். நிரந்தரமாக எவருமே தங்கியிருக்கவில்லையே” ?

மன்னன் மண்டையில் ஒரு மின்னல். இந்த உலகில் எவரும் எதுவும் நிரந்தரம் இல்லை. நாம் எல்லோருமே இந்த உலகில் சிலகாலம் தங்கி செல்லும் வழிப்போக்கர்கள்தான்..

நாம் நிரந்தரம் என்ற தவறான எண்ணம் மனதில் உதிக்கக் காரணம், மாயையின் வேலை.

மன்னன் மனம் தெளிந்தான். மாறினான். மக்கள் மகிழ்ந்தார்கள் என்று முடிகிறது இந்த கதை.

## 5 . 5 ஞானிகளின் வினோதமான செயல்கள்

சில ஞானிகள் சில சமயங்களில் சிறிதும் எதிர்பாராத விதமாக சில செயல்களில் ஈடுபடுவதை நாம் கேட்டிருக்கிறோம். தான் அறிவில் உயர்ந்திருந்தாலும், சாதாரணமான சராசரி மனிதன் தான் என்று பறைசாத்தி. மற்றவர்கள் எப்படி நடந்து கொள்ளவேண்டும்

என்று தான் முன் உதாரணாமாக நடந்துகொள்ளும் ஞானிகள் ஏராளம். இங்கே உதாரணத்திற்கு, ஒரு உண்மை நிகழ்ச்சி.

## கதை 06

## ஸுஜுகி ரோஷி

ஸுஜுகி ரோஷி என்ற சமீபகால ஜென் மாஸ்டர், அமெரிக்காவில் உள்ள கேம்பிரிட்ஜ் பௌத்த சங்கம் என்ற அமைப்பை விஜயம் செய்து சொற்பொழிவு ஆற்றுவதாக இருந்தது. அதற்காக, சங்க அங்கத்தினர்கள் ஒன்று சேர்ந்து அவரை வரவேற்பது சம்பந்தமான ஏற்பாடுகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்.

விழாவுக்கு முன்தினம், சொற்பொழிவு நடக்கும் அந்த ஹாலில் பலர், தரையை தீவிரமாக சுத்தப்படுத்தும் வேலையில் இருந்தபோது அந்த எதிர்பாராதது நடந்தது. அங்கு சுத்தப்படுத்தும் மனிதர்களில் ஒருவர் ஜென் மாஸ்டர், ஸுஜுகி ரோஷி. எதிர்பாராதவிரமாக ஒருநாள் முன்னதாகவே வந்து சேர்ந்திருந்தார். தன் அங்கியை மடித்து கட்டிக்கொண்டு மக்களோடு மக்களாக, அரங்கின் தரையை சுத்தம் செய்யத் தயாரானார். இதை கண்டு சிலர் அவரை தடுக்க முயற்சி செய்ய, அவர் கூறினார், நாளை எனக்கு தரவிருக்கும் பிரம்மாண்ட வரவேற்பிற்கான ஏற்பாடுகளில் நானும் பங்கேற்க விரும்புகிறேன்.

நம்ம ஊரில் மணிக்கணக்காக காக்க வைத்து உயிரை வாங்கும் விழா தலைவர்களை நினைவில் கொண்டு வாருங்கள். செயல்பாட்டிற்கும், மனதை பக்குவபடுத்துவதற்கும் இந்த புத்தர்களின் வாழ்கைப் பாதைகள் முக்கியத்துவம் தருவது அதன் சிறப்பு.

தலைவரும் ஒரு தொண்டரே என்ற தன் செயல்மூலம் உணர்த்தும் இந்த பெரியவரை பின்பற்றிய சமுதாயம் எவ்வளவு நன்றாக இருக்கும்?

## 5.6 ஞானிகளுக்கு நகைச்சுவை உணர்வு இருக்காதா? யார் சொன்னார்கள்?

### கதை 07

### கடிமாஸ்டர்

ஒரு இளைஞன். எங்கோ வெளியூர் சென்றுவிட்டு சிலநாள் கழித்து வீடு திரும்புகிறான். வழியில் வெளியூர் செல்லும் முன்னால் வறண்டிருந்த ஆறு இப்போது வெள்ளம் வந்து நிரம்பியிருந்தது. முன்னேற முடியாத நிலை. காத்திருந்தான். சில மணி நேரம் கழிந்தது. ஆற்றின் மறு கரையில் ஒரு ஜென் மாஸ்டர். வந்து சேர்ந்தார். இளைஞனுக்குச் சிறிது நம்பிக்கை பிறந்தது.

இந்த கரையிலிருந்து மறுகரை வரை கேட்கும்பதியாக ஜென் மாஸ்டரை நோக்கி கத்தினான். அறிவு நிறைந்தவரே ! நான் (அந்த) எதிர்கரைக்கு வருவது எப்படி? மாஸ்டர் பதில் தந்தார், “மகனே, நீ இப்போது எதிர் கரையில்தானே இருக்கிறாய்”? இவர் ஜென் மாஸ்டரா அல்லது கடி மாஸ்டரா?

## 5.7 தேனீர் கோப்பைக்குள் ஒரு பாடம்

ஒரு ஜென் மாணவன், தன் குரு  திரு ரோஷி அவர்களை கேட்கிறான். 'ஜப்பானியர்கள் தேனீர் வழங்கும் கோப்பைகளை எதற்காக மிகவும் மெல்லியதாக தயாரிக்கிறார்கள்?' அவைகள் எளிதில் உடைந்து போகும்படியாக இருக்கிறதே. குரு பதிலளித்தார்,

‘தேனீர் கோப்பைகள் உடைந்து போவது எதனால்‘? கப்-ஐ எப்படி கேயாள்வது என்பதை நாம் அறியாத காரணத்தினால்.

மாத்திரமே அல்லவா?

நம்மை சுற்றியுள்ள எதையும், (பொருள்கள், மனிதர்கள் உள்பட) நம் மனது மற்றும் இயல்புக்கு தகுந்தவாறு இருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பதைவிட, அதன் தன்மைக்கு ஏற்றபடி நம்மை

மாற்றிக்கொள்வது என்ற மனப்போக்கு வந்துவிட்டால் நட்பு, உறவு என்று எதுவுமே இனிக்கும், நிலைக்கும். இழப்புகள் குறையும். இந்த மெல்லிய கோப்பைகளை நாம் கையாளும்போது அந்த பயிற்சி நமக்கு தானாகவே வரும்.

## 5 . 8. நமது சிறிய பிரச்சினைகள்

## புத்த துறவி ஒருவர் சொன்ன ஒரு அருமையான கதை

### கதை 08

### ராஜகுமாரியின் வால்

இதில் புதைந்துள்ள உண்மையை நாம் புரிந்து கொண்டு மனதில் நிறுத்தி விடவேண்டும். அதன் பிறகு நமது வாழ்கையின் மகிழ்ச்சியை குவிக்கிறோமோ இல்லையோ, துயங்களை கணிசமாக குறைக்கலாம்.

ஒரு பெரிய சக்ரவர்த்திக்கு ஒரே ஒரு மகள். அதாவது ராஜகுமாரி. இந்த சிறுமி விளையாடும் போது கண் ஒன்றில் மண் புகுந்தது. கண் சிவந்ததோடு, வீங்கவும் தொடங்கியது. போதாத குறைக்கு, சிறுமியோ தன் கண்ணை கசக்கியவாறு அழுதுவந்தாள். அரண்மனை மருத்துவர் வந்து பரிசோதித்தார். மருந்து தயாரித்து சிறுமியின் கண்ணில் இட முயற்சிக்கும் போது, இந்த சிறுமி ஒத்துழைக்கவில்லை. கண்ணை கசக்கியும் அழுதும் தொடர்ந்ததால் காயம் பெரியதானது. அரசருக்கு தன் மகள் காயம் பெரிய வருத்தம் தந்தாலும் மகள் விருப்பத்தை மீறி கட்டாயப்படுத்துவதை மன்னர் விரும்பவில்லை.

அரண்மனை மருத்துவர் தனது இயலாமையை தெரிவித்து கழண்டு கொண்டார். சிறுமி அழுவதும் கண்களை கசக்குவதும் தொடர்ந்ததால் காயமும் எளிதாக ஆறுவதாக இல்லை.

இந்த செய்தியை அறிந்த பெரியவர் ஒருவர், மருத்துவரல்லாத ஒரு வைத்தியர். இந்த நோயை மருந்து இல்லாமலேயே குணப்படுத்த முன்வந்தார். அரசரும் ஒப்புக்கொண்டார். இதை தொடர்ந்து பெரியவர் சிறுமியை பரிசோதித்தார். உதட்டை பிதுக்கினார். பின், அரசரைக்கண்டு தனியாக பேச வேண்டுமே என்றார். சிறுமி உள்பட அனைவருக்கும் ஒரு சஸ்பென்ஸ். மன்னர் வந்தார். மன்னரிடம் ஏதேதோ பெரியவர் விளக்கினார்.

பின் சிறுமியும் கேட்கும்படியாக, அரசரிடம் விளக்கம் தந்தார். இந்த கண்ணில் உண்டான காயம் மிக விரைவில் குணமாகிவிடும் இது பெரிய விஷயமில்லை. ஆனால், நான் கவலைப்படுவது அதற்காக இல்லை. இந்த பெண்ணுக்கு வால் ஒன்று முளைக்க இருக்கிறது. அது வளர்ந்தால், சுமார் முப்பது அடிவரை வளரும். அதன் பின் என்னாகுமோ எனக்கு தெரியவில்லை. அதுவும் பெரிய ஆபத்தில்லை. சில நாட்களுக்கு கவனமாக இருக்க வேண்டும். சிறிது வால் தோன்றியதும் எனக்கு உடனடியாக அறிவித்து விடவேண்டும். அதற்கு மிக சிறந்த மருந்து ஒன்று உண்டு. அதைக்கொண்டு வால் வளராமல் செய்துவிடலாம், எவ்வளவு விரைவில் எனக்கு தகவல் கிடைக்கிறதோ, அவ்வளவு வேகம் வால் பெரிதாகாமல் தடுக்கலாம் என்கிறார்.

வாலுள்ள பெண்ணா? சிறுமி, ராஜகுமாரிக்கு பயம் தோன்றியதில் வியப்பில்லை. படுக்கை அறையிலிருந்த இந்த சிறுமி வெளியே வரவில்லை. வால் முளைத்ததா என்று அறிவதிலேயே கவனமாக இருந்தாள்.

கண் வெகுவிரைவிலேயே குணமானது. மருத்துவரல்லாத வைத்தியர், சிறுமியை பரிசோதித்து, வால் முளைப்பதற்கான அறிகுறிகள் மறைந்து விட்டதாக கூறினார். எல்லாமே

நல்லபடியாக முடிந்தது. அரசரும் பொன்னும் பொருளும் அள்ளித்தந்து வைத்தியரை பாராட்டினார். .

இந்த கதை சொல்லும் மிக முக்கிய வாழ்க்கைப்பாடங்கள் என்ன? மருத்துவர் வெற்றி அடைந்தது எப்படி ? இந்த பெண்ணின் கவனத்தை கண்ணிலிருந்து கழட்டி வால் முளைக்கும் என்று பயமுறுத்தி கதை ஒன்றை கட்டி, இல்லாத ஒன்றில் மாத்தி விட்டார் அல்லது திருப்பினார் இந்த வைத்தியர், கண் தானாக சரியாகியது.

இதை இருகோடுகள் தத்துவம் எனவும் சொல்லலாம். அதாவது சிறிய பிரச்சனைகளை ஒரு பெரிய பிரச்சனை இடம் தெரியாமல் அழித்துவிடும். நாம் தினம்தோரும் சந்திக்கும் எந்த ஒரு பிரச்சனையும் உண்மையாகவே கடுமையானவை இல்லை. ஆனாலும் அதைமட்டுமே நாம் தீவிரமாக உற்று கவனிக்கும் போது, அது அசுர உரு எடுத்து நம்மை பயமுறுத்துகிறது. அதே சமயம் நம் கவனம் திருப்பப்பட்டாலோ, அதே பிரச்சனைகள் நம்மை துன்புறுத்துவது இல்லை.

மனிதன் தன் பிரச்சனைகளிலிருந்து நிரந்தர விடுதலை பெற, ஞானிகள் கண்டுபிடித்து சொன்ன வழி, மனதை தான், தனது என்பதிலிருந்து கழற்றி கடவுள் சமுதாயம் என்பதில் மாட்டிவிடு. சுய நலத்தை கழட்டி வைத்துவிட்டு பொதுநல சேவை, சமூக சேவை என்று இறங்கிவிட்டால், நமது பிரச்சனைகள் மற்றவர் பிரச்சனைகள் முன்னால் சிறியதாகமாற, ஒளிந்து ஓடிவிடும்.

இதனால் இரண்டு மிகப்பெரிய லாபம், நமது கவலைகளும் பிரச்சனைகளும் இடம் தெரியாமல் ஓடிவிடும். அதோடு, நமக்கு மட்டுமில்லை நம்மை சுற்றி இருப்பவர்களுக்கும் நம்மால் நன்மைதானே? இதைத்தவிர வேறு ஒரு முக்கிய தகவல்.

எது எதற்கு அடிமை? மனிதனை இயக்க இரண்டு சக்திகள். ஒன்று நம் அறியும் பொரிகள், மற்றது மனது. சாதாரண மனிதனின்

பொரிகள் மனிதனின் மனத்தை அடிமையாக்கி வைப்பதால் மனிதன் மனம் இன்பத்தை நாடியும் துன்பத்தில் மூழ்கியும் இருக்கிறது.

மாறாக, மனதை தயார்செய்து, அறியும் பொரிகளை அடக்கி அவற்றை மனதிற்கு அடிமையாக்குபவர்கள், ஞானிகள், முனிவர்கள், ஆகியோர்., அவர்களை துன்பம் துறத்தாது.

இரண்டாவதாக வந்த மருத்துவரல்லாத வைத்தியர், தனது கற்பனை மற்றும் வாக்கு திறமையால், சிறுமியின் மனதை, அதாவது கவனத்தை கண்ணிலிருந்து முதுகுக்கு மாற்றினார். அதன் பலன் சிறுமியின் கண் தானாகவே குணமானது.

இரு கோடுகள் தத்துவம், அரை கப் ஓயின் என்று ஒரு காலத்தில் வெகுவாக பேசப்பட்டு வந்தது. இல்லாத ஒரு பெரிய பிரச்சனையை காட்டி, இருந்த பிரச்சனையை சுலபமாக தீர்த்து வைத்ததாகவும் நினைத்துக்கொள்ளலாம்.

இதே முறையை கேயாண்டு, அனெஸ்த்தீஷியா முலம் நினைவு இழக்கச் செய்யாமலேயே, அறுவை சிகிக்சைகள் நடத்தப்படுகின்றன என்று நீங்கள் கேட்டிருக்கலாம்.

ஹிப்னாட்டிக் ஸஜஷன் என்னும் குணப்படுத்தும் முறைகூட இந்த அடிப்படையில் இருக்கக்கூடும்.

## 5 . 9. துறவிகள் எல்லோருமே ஞானிகளில்லை.

## கதை 09.

## விரலை நறுக்கிய புத்த துறவி

துறவிகள் எல்லோருமே, தான் அறிந்தோ, அறியாமலோ, அறிவுப் பாதையில் ஒரு பயணி அவ்வளவுதான். இவர்கள், விடாது தனது பயணத்தை தொடர்ந்ததால், என்றாவது ஒரு நாள் ஞானியாகலாம், இதை விளக்க ஒரு ஜென்கதை.

நம்ம ஊரில் மாணவனை அடித்துவிட்டால், வாத்தியாரை, போலீஸ் புகாரில் ஆரம்பித்து, டிவி செய்தி சானலில் ஆடவிட்டு, பின் ஓட ஓட விரட்டிடுவோம் இல்லையா? குருகுலத்தில், ஒரு மாணவருக்கு விரல் போன கதையை படிக்கலாம்.

பொதுவாக, கடந்த சில நூற்றாண்டுகள் முன்னால், கல்வி என்றாலே, குரு குலம்தான். ஒரு துறவி இருப்பார். தனது பிள்ளைகளுக்கு கல்வி தர விரும்பும் மக்கள், இந்த துறவியை அணுகி (காக்காய்) பிடித்து, இளம் வயதில் உள்ள தனது பிள்ளையை ஒப்படைப்பார். இந்த சிறுவர்கள், குருவின் வீட்டிலும், நிலத்திலும் வேலை செய்து அவருடனே வாழ்ந்து கல்வி பெறுவார்கள். எல்லா மாணவருக்கும், தினம்தோறும், குறிப்பிட்ட நேரத்தில் வகுப்பு நடத்தப்படும்.

வழக்கம் போல, ஒரு மாலை நேரம். குருவுக்கு முன்னால் எல்லா மாணவரும் கூடியிருக்கிறார்கள். மாணவரில் மூத்தவர்கள் மாத்திரம் குருவின் பேச்சை, உன்னிப்பாக கவனிக்கிறார்கள். சிலருக்கு கவனம் வேறு எங்கோ செல்கிறது. ஒரே ஒரு மாணவன் குருவின் கவனத்தை தன்மீது இழுக்கிறான்.

குருவுக்கு, ஒரு மானரிசம். தன்னை அறியாமலேயே, தன்னிச்சையான ஒரு செயல்பாடு. விளக்கங்கள் தரும்போது, தனது வலதுகையை உயர்த்தி, மற்ற நான்கு விரல்கள் மடிந்திருக்க ஆள்காட்டி விரலை மாத்திரம், மேலும் கீழுமாக அசைப்பார்.

இந்த மாணவன், குரு தன் விரலை அசைக்கும் போதேல்லாம், அவனும் தன் விரலை அசைத்தபடி (குருவைக் காப்பியடித்தபடி) இருந்தான். மாணவன், தன் வார்த்தைகளில் கவனம் செலுத்தாது, அங்க அசைவுகளில் லயித்திருப்பது குறித்து குருவுக்குப் பொல்லாத கோபம்.

திடீரென்று, அந்த சிறுவன் அருகில் வந்தார். அவன் வலது கேயை பிடித்து, ஆள் காட்டி விரலை வெட்டி எடுத்தார். (என்ன,

இப்படி ஒரு கொடுமையான வாத்தியார்?) பிறகு, மூலிகை மருந்து வைத்துக் காயத்தில் கட்டு போடப்பட்டது.

வழக்கம் போல, தினந்தோறும், மாலை வகுப்பு நடந்தது. கையில் கட்டுடன் சிறுவன் ஒரு மூலையில் அமர்ந்து, குருவை கவனித்து வந்தான்.

காயம் ஆறியது. கட்டு அவிழ்க்கபட்டது. ஆள்காட்டி விரல் இருந்த இடம் வெற்றிடமாக காட்சி அளித்தது.

இப்போது, ஒரு க்ளைமாக்ஸ் சீன்.

மாணவனை தன் அருகில் அழைத்தார். தான் எப்படி விரலை அசைப்பேனோ, அப்படி செய்து காட்டு என்றார். மாணவன் இல்லாத விரலை அசைத்தான் ! எனக்கு விரல் இல்லை எனவே எனது விரலை அசைக்க முடியாது என்று சொல்லவில்லை.

அந்த வினாடியில் குரு-மாணவன் இருவருக்கும் (enlightenment) ஞானோதயம் உண்டானதாகக் கதை முடிகிறது.

இந்த கதையில் நாம் கவனிக்க வேண்டிய விஷயங்கள் ஒன்று இரண்டல்ல.

(1) எந்த குருவும் தன் இலக்கை அடைந்தவரல்ல. இலக்கே நோக்கி பயணம் செய்யும் மாணவரே. பூரணமாக ஞான ஒளிவு பெற்றவரல்ல.

(2) மாணவர்கள், குருவிற்கு ஒரு வழித்துணை. குரு மாணவனைவிட சற்று அதிக பயணம செய்தவராக இருக்கலாம். அவ்வளவுதான். (நமது கல்விக்கூடங்களிலும் அப்படித்தானே?) குரு ஒருவர் தனது மாணவருக்கே மாணவரான சரித்திரமும் உண்டு.

(3) அறிவு விரிவடைவது. அல்லது ஞான ஒளி பெறுவது

என்பது ஒரு துறவியின் வாழ்வில் ஒரு முக்கிய திருப்புமுனை அல்லது முக்கிய கட்டம். அதுவும் ஆன்மிகப் பயணத்தின் ஒரு ஆரம்பமே, முடிவு அல்ல.

(4) நம்மை சதாகாலமும் இருள் போல சூழ்ந்திருக்கும் மாயையிலிருந்து (தாற்காலிகமாக இல்லாது) நிரந்தரமாகவும் முற்றிலும் விடுபடும் நிலையே ஞானியின் பயணத்தின் உச்ச கட்டம்.

சரி, இந்த கதையில் குரு மாணவர் இருவரும் அறிவு ஒளி பெற்றது எப்படி?

இந்த ஜென் குருமார்கள் ஒரு வம்பு பிடித்த ஆசாமிகள். பட்டென்று போட்டு உடைக்காமல், பூடகமாக சொல்லிவிட்டு போய்விடுவார்கள். இதற்கு விளக்கத்தை நாமாக தேடவேண்டும்.

எனது கணிப்பில். மாணவன் தான் முன்னேற வேண்டுமானால் வாத்தியாரின் கை-கால் அசைவுகளை விட்டு விட்டு வார்த்தைகளிலும், அது உணர்த்தும் பொருள்களிலும் கவனம் கொடுக்க வேண்டும். இல்லையானால், இன்ஸ்டால்மெண்டில் விரல்கள் காலியாகிவிடும் என்பது ஒரு படிப்பினை மாணவனுக்கு.

குருவுக்கு, “அய்யா மாணவனை திருத்த நினைத்த உங்கள் எண்ணம் தவறில்லை (அந்தக்கால நியதிப்படி). பையனைக் கவனித்தீரா? விரல் இல்லாதபோதும் ஆட்டினானே அய்யா? விலக்க வேண்டியது மாணவன் மனதில் பதிந்த விரலை, மாணவன் கையில் உள்ள விரலை அல்ல”.

“விரலை ஆட்டுவதை மானரிஸமாக கொண்டது நீங்கள். உண்மையில் வெட்ட வேண்டியது உங்கள் விரலை!

(புத்த மத கோட்பாடுகள், மனதை மையமாக கொண்டவை. பிற்காலத்தில் சேர்ந்து கொண்ட பூசைகள் ஆராதனைகள்

காலத்தின் கட்டாயத்தால் வழி அல்லது தடம் மாறியதாகக் கொள்ளலாம்).

# கதை 10. வீண்பழி ஏற்ற புத்த துறவி.

## 5.10. துறவியின் பொறுமை அன்பின் எல்லைகள் கதை

ஒரு ஊரில் மக்கள் மிகவும் மதித்த புத்த துறவி இருந்தார். அந்த ஊரில் இருந்த ஒரு இளம் பெண் காதலனை தேடிக்கொண்டாள், காதல் கொண்டாள். அதோடு நின்றிருந்தால் பரயில்லை. ஒரு படி முன்னேறி கருவுற்றிருந்தாள். விஷயம் வெளியாகி, காதலனை அடையாளம் காட்ட பயம். அவள் தேர்ந்து எடுத்த காதலனின் பின்னணியை பற்றி அவளுடைய கணிப்பே அப்படிப்பட்டது.

எத்தனை நாள் மறைக்க முடியும்.?

கதை நடந்த அந்த காலத்தில் காதும் காதும் வைத்தால் போல கருவை கலைக்க வசதிகளோ அல்லது தெருவுக்கு தெரு நர்சிங்ஹோம்களும் கிடையாது. பிரச்சனை தன் உச்ச கட்டத்தை அடைந்தது. வளரும் கருவின் தந்தை யார்? இந்த கேள்வியுடன் தாய் - தந்தை பெண்ணுக்கு அடி - உதைகளை வழங்க தயாரானார்கள்.

என்ன செய்வது? அவசரத்தில் ஒரு முடிவு செய்தாள். அந்த புகழ் பெற்ற புத்த பிக்குவை காதலனாக காடடினால் தாம் தப்பிக்கலாம் என்று.

முதலில் பெண்ணின் உறவினர்களும், தாய் தந்தையரும் நம்ப மறுத்தார்கள். பெண் தீர்மானமாக கூற, அந்த புத்த பிக்குவின் வீட்டை முகாமிட்டார்கள். கோபமும், சந்தேகமும் சேர்ந்தால் கேட்க வேண்டுமா? பிக்குவை நோக்கி, கேள்விகள் ஏவுகணைகளாக பறந்ததன. பிக்குவுக்கு, வந்தவர்கள் பிரச்சனை என்ன என்பதை புரிந்து கொள்ளவே சமயம் பிடித்தது. (கோபமாகவந்த மனிதர்கள் இந்த விஷயத்தில் எதிரியை முதலில் அடித்து இருப்பார்கள்.

அப்படி அடிக்கவில்லை என்றால் பிக்கு எப்படிப்பட்ட நல்ல மதிப்புடன் வாழ்ந்திருக்கவேண்டும்?)

அமைதியை கடை பிடித்தார். மறுத்து பேசவில்லை. (இந்த வழக்கம் நாடு மதம் கடந்து அனைத்து ஞானிகளுக்கும் பொதுவான ஒன்றாக தெரிகிறது. ஸ்வாமி ராமாவின் வாழ்க்கையிலும், இதே போன்ற ஒரு நிகழ்ச்சியை காணலாம்). மிகுந்த மரியாதைக்கு உரியவர். என்ன செய்வது. திட்டி விட்டு மக்கள் கலைந்தார்கள். சில காலம் கழிந்தது. பெண் ஒரு மகவை பெற்றாள்,

சொந்த பந்தங்கள் இந்த சிறிய குழந்தையை பிட்சுவிடம் எடுத்து சென்று உன் குழந்தையை நீயே வளர்த்துக்கொள் என்று விட்டுவிட்டு சென்றனர். மறுத்து ஒரு பேச்சும் இல்லாமல் குழந்தையை வாங்கி நல்ல முறையில் வளர்த்து வந்தார்.

சில வாரங்களே சென்றிருக்கும்.

என்ன நினைத்தாளோ, அந்த பெண். ஒரு நாள், தான் செய்த தவறை பெற்றோர்களிடம் கூறி உண்மையான காதலன் யார் என்று தெரிவித்தாள். உறவினர் அனைவரும், இந்த பெண்ணுடன் சென்று புத்த பிக்குவிடம் நடந்த தவறுக்கு மன்னிப்பு கேட்டு, குழந்தையை திரும்பப் பெற்று திரும்பினார்கள்.

அவரோ, குழந்தையை ஒப்படைத்துவிட்டு தன் வேலையில் மூழ்கினார், எதுவுமே நடக்காதது போல.

வீண் பொல்லாப்பை ஏற்றுக்கொண்டது மட்டுமின்றி கடைசி வரையில் முழுவதாக அமைதியுடன் நடந்து கொள்ள எத்தனை மனோதிடம் தேவை.? இந்த பொறுமையின் பின்னணியில் , அறியாத வயதில் பெண் தெரியாமல் செய்துவிட்ட தவறின் பழியை தாங்கியதற்கு சுத்தமான அன்புதானே ஆதாரம்?

நமது வாழ்க்கையில் தினசரி மனைவியை திட்டும் கணவன், மாணவனை திட்டும் ஆசிரியர், சிப்பந்திகளை திட்டும் அதிகாரி என்று சிலர் பலரை திட்டுகள் கொட்ட சிலரும் அதை அலட்சியம்

செய்வதை தொழிலாக கொண்ட பலரும் இருக்க, பாதி நேரம், மனிதனின் வாழ்க்கை வசவுகளிலேயே கழிகிறது.

நாம் சிறிதும் சிந்திப்பதில்லை, திட்டுவது பயன் தருமா இல்லையா, என்று. ஒரு நம்பிக்கை. திட்டிய பிறகு எல்லாமே சரியாக நடக்கும் என்ற நம்பிக்கை.

## 5.11 கழுதையில் அறிவை கண்ட ஸூபி துறவி

### கதை 11

### கழுதை வாத்தியார்.

அப்பாவி கழுதைகளை வாகனமாக அங்கீகாரம் பெற்ற அரபு நாடுகளின் வழங்கிவந்த பழங்கால கதை. பொதியை தாங்கிய ஒரு கழுதை. பின்னால் தொடரும் அதன் எசமானன். அவன் கையில் ஒரு நீண்ட குச்சி ஒன்று. குச்சியினால் அவ்வப்போது சுள்ளென்று விழும் அடிகளையும், இடை வெளி இல்லாமல் எசமானன் கொட்டும் வசைமொழிகளையும் தாங்கி வந்தது அந்த பரிதாபகரமான கழுதை.

இருவரும் சாலையில் சென்று கொண்டிருந்தனர் என்ன கோபமோ இந்த மனிதருக்கு. கழுதை என்ன தப்பு செய்தது என்பதும் புரியவில்லை. இடை இடையே கையிலுள்ள குச்சியால் சுளீர் என்ற எசமானனின் வீச்சில் கழுதை வலி தாளாது துள்ளிக்குதிக்கும். போதாதற்கு, அருகில் சென்று காலால் எட்டி உதைப்பார்.

கழுதை – அதன் எசமான் இந்த இரண்டையும் கவனித்தவாறு ஒரு ஸூபி ஞானி கடந்து சென்றார்.

சற்று நிதானித்து, சுபிஞானி நின்று, கழுதையின் எசமானிடம் ரத்தின சுருக்கமாக சில வார்த்தைகள் பேசினார்.

நண்பனே, இந்த உயிர்கள், மனிதனின் பேச்சு மற்றும் அசைவுகளை கொண்டு புரிந்து கொள்ளும் வகையில் படைக்கப்படவில்லை. (உண்மையில் பல மனிதர்கள் உள்பட). அதை அடித்து உதைத்து திட்டி எதுவும் மாறப்போவதில்லை. எந்த பலனும் கிடைக்கப் போவதில்லை.

ஆனால், இந்த மிருகத்திடமிருந்து நீ கற்பதற்கு ஒன்று இருக்கிறது … என்று தனது பேச்சை சற்று நிறுத்தினார். உடனே, கழுதையின் எசமானுக்கு ஒரே அதிசயம். இந்த உதவாக்கரை கழுதையிடமிருந்து நான் கற்பதா?

ஞானி தொடர்ந்தார்.

ஒரு கழுதையின் முன்னிலையில், மிக கோபம் உண்டாக்கும் சூழ்நிலையில் மௌனமாக இருப்பதும், அமைதியை காப்பதும், என்று கூறி வேகமாக கடந்து சென்றார். (இதில் உள்ள சிலேடையை மிக அமர்க்களாமானது. கழுதை யார், இங்கே?)

## 5.12. இப்படிப்பட்ட துறவிகள் பலரை சரித்திரத்தில் காணலாம்.

### கதை 12.

### துறவியிடமிருந்து திருடிய பைபிள்.

இது, எகிப்திய நாட்டில் ஒரு மடாலயத்தில் நடந்ததாக சொல்லப்பட்ட கதை. மடாலயத்திற்கு தலைவர் ஒருவர் இருப்பார் இல்லையா? அவர் தான் அனஸ்டாசியஸ் என்ற பெயர் கொண்ட மத குரு. தனது சக பாதிரியார்களால் ஞானி என்று மரியாதையாக அறியப்பட்டவர் இவர்.

ஜேம்ஸ் என்ற ஒரு நபர் பாபங்கள் செய்தார் என்று அவரை சமூகத்திலிருந்து விலக்கிவைக்க முடிவாகியது. அதை எதிர்த்த அனாஸ்டியஸ் தானும் பாபி என்று கூறி, குடியிருப்பிலிருந்து தானும் வெளியேறினார்.

அப்படியிருந்தும் ஜேம்ஸ் திருந்தவில்லை. ஒருநாள் மாலை வேளையில் அனாஸ்தியஸ் பிரார்த்தனையில் மூழ்கிருந்தார். அப்பொழுது ஜேம்ஸ் வருகைதர, பாதிரியாரின் பிரார்த்தனை தடைப்பட்டது. ஜேம்ஸ் வருத்தம் தெரிவித்தார். அதை மறுத்து ஜேம்ஸ்-ஐ வரவேற்று உபசரித்து, உண்ண உணவு மற்றும் உறங்க வசதிகள் என்று செய்து தந்தார் பாதிரியார்.

மறுநாள் காலை ஜேம்ஸ் பாதிரியாரின் வீட்டிலிருந்து விடைபெற்று வெளியேறுகிறான். போகும் போது, பாதிரியாரின் இல்லத்திலிருந்த விலைமதிக்கமுடியாத பைபிள் புத்தகம் ஒன்றைத் திருடிச் செல்கிறான். பாதிரியாருக்கு இதை கண்டு பிடிக்க வெகுநேரமாகவில்லை . இருந்த போதிலும், ஜேம்சை பின்தொடரவில்லை.

அவரது கவலை நம்மைவிட வித்தியாசமானது. ஏற்கனவே திருட்டு என்கிற பாபம் செய்தவனை, தான் திருடவில்லை எனகிற பொய்யை கூற வைத்து புதிய பாபம் ஒன்றை ஜேம்ஸ் சேர்த்துக் கொள்ள வாய்ப்பு தரும் என்று பயந்தார்.

பைபிளை எடுத்து சென்ற ஜேம்ஸ், அந்த ஊரிலுள்ள வியாபாரியிடம் காண்பித்து பெரும் தொகை ஒன்றை கேட்டான். தான் விசாரித்து பின் விலை நிர்ணயம் செய்யலாமென்று வியாபாரி கூறினான்.

பைபிளின் மதிப்பை சரியாக சொல்ல மக்களால் பெரிதும் மதிக்கப்பட்ட பாதிரியார் அனஸ்டாசியஸ் விட தகுதிபெற்ற யாரும் இருக்க முடியாதல்லவா? வியாபாரி, பாதிரியார் அனஸ்டாசியஸ் அவர்களிடம், புத்தகத்தை கொண்டு சென்றார். பாதிரியார் புத்தகத்தை இனம் கண்டாலும் வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

வியாபாரியிடம், புத்தகத்தை விற்க வந்தவர் செய்த மதிப்பு குறைவென்றும், அந்த புத்தகம் அதிக விலை பெரும் என்று

கூற, வியாபாரி ஜேம்ஸ்க்கு அதிக பணம் தந்தார். அதோடு பாதிரியாரை தாம் கண்டு இந்த புத்தகத்தின் உண்மையான மதிப்பை கேட்டு அறிந்ததாகவும் தெரிவித்தார்.

ஜேம்ஸ் கண்களில் நீர் வழிய, தான் புத்தகத்தை விற்பதற்கில்லை என்று கூறி பாதிரியாரிடம் திரும்பி வந்தான். செய்த தவறுகளுக்கு மன்னிப்பு கோரினான். அன்புடன் அரவணைத்த பாதிரியார், அந்த பைபிளை பரிசாக ஜேம்ஸ்க்கு தந்து அதை படித்து, யேசுவின் பாதையில் நடந்து இவனின் அன்பை பெறுமாறு வாழ்த்தினார்.

ஜேம்ஸ் இந்த நிகழ்ச்சிக்கு பின் மனம் மாறி நல்வாழ்க்கை ஒன்றை மேற்கொண்டதாக கதை முடிகிறது. இந்த கதை, இந்த மதகுருவின் பெயரில் பல வடிவங்களில் காணலாம். அதேபோல சில புத்தமத கதைகளிலும் இதே போன்ற நிகழ்ச்சிகள் - அன்புகாட்டும் ஆன்மீகர்களால் மனம் மாறும் தீயவர்கள் - பல காணலாம்.

துறவியின் இயல்புகள்.

## கதை 13.

# திருட்டு

சீனாவின் ஒருபகுதி திபெத்.

சீனாவை பற்றி என் வாசகர்களுக்கு என்ன தெரியும் என்று எனக்கு தெரியாது. அதனால், ஏதோ, சுருக்கமாக இந்த கதையின் வாசகர்களுக்கு தெரிந்து கொள்வது அவசியம்.

மிக சிறந்த சிந்தனையாளர்கள் (கன்பூஷியஸ் தொடங்கி, ஜென், தோ இயக்கத்தில் இன்றும், என்றும் மிக சீரிய சிந்தனையாளர்கள், தத்துவ மேதைகள் என்று கருதப்படும்) பலர் பிறந்த இந்த சீனாவில், இன்று, பேச்சு சுதந்திரம் மக்களுக்கு கிடையாது. ஜாதி மதம் பற்றி யாரும் பேசக்கூடாது, கலாட்டா செய்யக்கூடாது. உழைப்பு தான் கடவுள், ஜாதி, மதம் எல்லாமே. (நல்லது தானே !).

லஞ்சம், ஊழல் – நிறையவே உண்டு.

சமீப காலம் வரை சீன மொழியை தவிர பொது மக்களுக்கு ஒன்றும் தெரியாததால், மக்களை மாங்காய் மடையர்களாக மாற்றி வைத்து ஆட்சியை காப்பாற்ற முடிகிறது. கூட்டமாக ஆட்சியாளாரை எதிர்த்தால், தினாமென் ஸ்கொயர் தான். டிஷ்யும் – டிஷ்யும்.

திபெத்தியர்கள் புத்தமதத்தை பின்பற்றுபவர்கள் என்றால், தவறு. இவர்கள் புத்த மதத்தில் கரைந்து, ஒன்றாக கலந்து வாழும் ஒரு தனிப்பிறவிகள் அடங்கிய ஒரு மக்கள் கூட்டம். இப்பொழுது, திபேத்தை பிடிக்க வந்த ஆங்கிலேய படையை திபெத் புத்த பிட்சுக்கள் எதிர்த்த முறை (இண்டெர் நெட்டில் கூகுள் செய்து பிடியுங்கள், படியுங்கள்) இவர்களின் தியாகம், சாகசத்திற்கும் மற்றும் அணுகு முறைக்கும் ஒரு சாம்பிள்.

படித்தபின், இவர்கள் இப்போதைய சீனாவில் ஏன் கலந்து இருக்க முடியாது என்று முழுவதாக புரியும். மிக அதிக அளவில் இந்தியா முதலான பல நாடுகளில் தஞ்சம் அடைந்து சுதந்திர திபெத்திற்காக போராடி வருகிறார்கள்.

இப்போது கதைக்குள் நுழைவோம்.

இது பன்னிரண்டாம் நூற்றாண்டை சேர்ந்த ஒரு கதை. ஜென் மாஸ்டர் என்று அறியப்படுபவர்கள் புத்த துறவிகள் ஜீஷி பென் என்ற ஒரு ஜென் மாஸ்டர். உண்மை துறவிகளின் தன்மையான தூய்மையான நல்ல உள்ளம், அப்பழுக்கு இல்லாத நேர்மை, போன்ற குணங்களைக் கொண்டவர்.

நம் நாட்டு அரசியல்வாதிகள் நடப்பில் கொண்டுவராத, ஒரு நபர் ஒரு பதவி என்ற திட்டத்தை கடந்த பல ஆயிரம் வருட காலமாக உறுதியாக கடை பிடித்து வரும் சிலரில், இந்த சாது, சன்யாசி, துறவிகள் முக்கியமானவர்கள். கடவுளையும் உண்மையையும் தேடி அலைவதே இவர்களுக்கு வேலை. உணவுக்காக வேறு

(இரண்டாவது) வேலை செய்வதில்லை. மக்களிடமிருந்து உணவை பிச்சையாக பெற்று கொள்வது இவர்கள் வழக்கம். பொருள் உலகத்தை துறந்த இவர்களுக்கு உணவு தந்து உபசரிப்பதில் மக்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி.

ஒரு முறை, உணவைத்தேடி வந்த இந்த பிட்சுவை அவருடைய ஆழ்ந்த பக்தர்களான ஒரு குடும்பம் வரவேற்றது. விருந்தினரை ஒரு அறையில் தங்க வைத்தார்கள். உணவு தயாராகிக் கொண்டிருந்தது. உணவு தயாராக இன்னும் சில மணிகளோ அல்லது பல நிமிடங்களோ எடுக்கலாம் என்ற நிலை. வீட்டு மனிதர்கள் உணவு தயாரிப்பதிலும், இதர வேலைகளிலும் மும்முரமாக இருந்தார்கள்.

விருந்தினரான பிட்சுவுக்கு பசியை தாங்க முடியவில்லை. அந்த அறையிலிருந்த உணவு ஜாடி ஒன்று கண்ணில் பட்டது. உடனே, அவரையும் மீறி, ஜாடிக்குள் கையை விட்டார். அவ்வளவுதான்.. உடனே, திருடன், திருடன் என்று கத்தினார். கையும் களவுமாக திருடனை பிடித்ததுவிட்டதாக கூவினார். வீட்டார் அவர் தங்கியிருந்த அறையை அடைந்தனர். விருந்தினரைத் தவிர வேறு எவரையும் அந்த அறையில் காணாததினால் முதலில் விழித்தார்கள்.

பிட்சுவோ எவரையோ திட்டிக்கொண்டிருந்தார். இனிமேல் திருட்டு வேலையில் ஈடுபட்டால், ஒடித்து விடுவேன் இந்த கையை என்று கூச்சலிட்டார். அவர் பிடித்திருந்தது, தனது மற்றொரு கையைத்தான். யாரும் பார்க்காத நேரத்தில் செய்த தனது திருட்டை தானே கண்டுபிடித்து, கூக்குரலிட்டு தண்டனையும் தந்து, எச்சரிக்கையும் விடுத்த ஒரே மனிதர் இவராகத்தான் இருக்க முடியும்.

சில கடைசி வார்த்தைகள் –

இந்த பிட்சு திருட்டை செய்யாமலேயே இருந்திருக்கலாமே, என்று

சிலர் சொல்லலாம். நல்லவர்கள் கூட, தங்கள் அறிவை மீறி தவறு செய்யும் சூழ்நிலைகள் உண்டு. அப்பொழுது அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதுதான் முக்கியம்.

## கதை 14 நேர்மை என்பது

எனது நண்பர் ஒருவர் அலுவலக வேலையாக ஜப்பானுக்கு சென்றார். ஒரு வாரம் தங்கியிருந்த அவருக்கு பல நிறுவனங்களுடன் நேரில் தொடர்பு கொள்ள கார் ஒன்று வாடகைக்கார் கம்பெனி ஒன்றில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

முதல் நாள், குறிப்பிட்ட நேரத்திற்கு 15 நிமிடங்கள் முன்பாகவே வந்த டாக்சி டிரைவர் இரண்டாவது நாள் 10 நிமிடங்கள் தாமதமாக வந்தார். அழாத குறையாக பயணியிடம் மன்னிப்பு கேட்டார். நண்பரோ, அய்யா, கவலைப்படவேண்டாம், எனக்கு உங்கள் தாமதம் எந்த வகையிலும் இடையூறு விளைவிக்கவில்லை. நான் அரைமணி நேரம் முன்பாகவே வரும்படி கேட்டிருந்தேன். அவ்வளவுதான் என்று விளக்கினார்.

அப்படியானால், இன்னும் ஒரு நிமிடம் எனக்கு தருகிறீர்களா என்று கேட்டார். அதனால் என்ன, 15 நிமிடம் கூட நீங்கள் எடுத்துக்கொள்ளலாம் என்று பதில் சொன்னார் நண்பர். வழியில், ஒரு அலுவலகம் முன் கார் நின்றது. டிரைவர் பணிவுடன், ஒரே நிமிடத்தில் திரும்புவதாக சொல்லி, அலுவலகத்தினுள் வேகமாக சென்றார். சொன்னபடி ஒரே நிமிடத்தில் திரும்பி நன்றி கூறி காரை கிளப்பினார். அப்போது, டிரைவர் திரும்பவும் நன்றி சொல்லி விட்டு, அவர் சென்றதுதான் அவருடைய அலுவலகம் என்றும். தான் அன்று தாமதமாக வந்ததற்காக, அலுவலக விதிகளின் படி அறைநாள் லீவுக்கு லெட்டர் எழுதித் தந்துவிட்டு வந்ததாகக் கூறினார்.

என் நண்பர் கூறினார், “நண்பரே. உங்கள் தாமதம் எனக்கு எந்த .கஷ்டமும் தரவில்லை. என்னைத் தவிர யாருக்கும் தெரியாது”.

என்று சொல்லி, “நீங்கள் அரைநாள் விடுமுறையை வீணாக இழந்திருக்கவேண்டாமே“என்றுதொடங்கியவர்முடிக்கவில்லை. டிரைவர் முடித்துவிட்டார். “எனக்குத் தெரியுமே”! என்று.

நம நாட்டின் வறுமைக்கும் ஜப்பான் நாட்டின் வளமைக்கும் காரணம் புரிகிறதல்லவா? பயணிகளிடமிருந்து காசு வாங்கிக்கொண்டு டிக்கெட் கொடுக்காத கண்டக்டர்கள். சூடு வைத்த மீட்டருடன் ஓடிக் கொண்டிருக்கும் ஆட்டோக்கள், காந்தி தலைகளை பெறாமல் எந்த காரியத்தையும் செய்ய மறுக்கும் அரசு அலுவலர்கள். மக்கள் பணத்தைச் சுரண்டி வெளிநாட்டு வங்கிகளில் நிரப்பும் அதிகாரிகள் மற்றும் தலைவர்கள். இவர்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாக இந்த கார் ஓட்டுனரின் கால் தூசிக்கு சமமாக மாட்டார்கள்.

ஜப்பானிய பெண் ஒருத்தி எங்களுக்கு ஒரு குடும்ப நண்பி. அவரிடம் பேசியபோது, இதில் அதிசயம் என்ன இருக்கிறது என்பதுபோல விழித்தார். இதற்கு மேல் பேசினால், நமது நாடே ஒரு ஊழல் என்பதை சொல்ல வேண்டிவரும். அதனால் அதோடு விவாதத்தை நிறுத்திக்கொண்டோம்.

இந்த உண்மை நிகழ்ச்சியிலிருந்து இரண்டு விஷயங்கள் தெளிவு.

நேர்மை என்பது துறவிகளுக்கு மட்டும்தான் இருக்கும், அல்லது இருக்க வேண்டும் என்பதில்லை. நல்ல குணங்கள், நேர்மை என்ற பல அரிய சொத்துகளை ஞானிகள் மட்டுமில்லாமல் நமது நாட்டில் கூட பல ஏழை எளியவர் பலரின் நிரந்தர உடைமையாக என்றும் காண்கிறோம். சுவாசம் விடுவது போல, இடைவிடாமல் பொய் பேசுவதையும், மற்றவரை ஏமாற்றுவதை அனிச்சை செயலாக கொண்டிருக்கும் மக்கள் மத்தியில், நமக்கு, இந்த ஓட்டுனரின் செயல் ஒரு அதிசயமாக தெரிகிறது அவ்வளவு தான்.

பல ஞானிகள் நம்மை சுவர்கத்திற்கு கொண்டு செல்ல முயற்சி செய்கிறார்கள். ஆனால் ...... நடப்பது என்னவோ !............

## கதை 15

## நாமெல்லாம் சாணிப்புழுக்களே

சுவர்கங்களையும் நரகங்களையும் யாரும் பார்த்ததில்லை. சுவர்கத்தையும், நரகத்தையும் ஒவ்வொரு மதமும் வெவ்வேறு விதமாகச் சித்தரிக்கின்றன.

இவைகள் உண்மையா? அல்லது, மனிதன் ஒருவரை ஒருவர் காயப்படுத்தி, மற்றவருக்கு துன்பம் தராமலும், அதனால் தானும் அவதிப்படாலும் வாழ வைக்க ஞானிகள் தங்கள் கற்பனையில் உருவாக்கிய ஒன்றா ? இப்போது இதைப் பற்றி நமக்குக் கவலை வேண்டாம்.

இந்த கதையை உருவாக்கியவர் என்ன சொல்ல நினைத்தாரோ, ஆனால் நான் இதில் காண்பது என்ன என்பது தெரிய, கீழே படியுங்கள் :

இரண்டு புத்த பிட்சுக்கள், ஒரே மடாலயத்தில் ஒன்றாகவே சேர்ந்து, கற்று, வாழ்ந்து வளர்ந்தவர்கள். காலாகாலத்தில் கிழவர்களாகி, அடுத்தடுத்து இறந்தார்கள்.

எல்லா மதங்களும் சொல்வதைப்போல, முதலாமவர், நல்ல ஒரு மனிதனாக, யோகியாக, ஞானியாக வாழ்ந்து வந்த காரணத்தால், இறந்த பின் மீண்டும் கண் விழித்தபோது, சுவர்கத்தில் பிறந்திருப்பதை உணர்ந்தார். “என்ன ஒரு ஆனந்த மயமான உலகம், எப்படிப்பட்ட உல்லாச வாழ்கை” என்று அதிசயித்தார். நல்ல மனிதனானதால், தன் நண்பனைத் தேடினார். (இங்கே கவனிக்க வேண்டிய ஒன்று, ஞானிகளுக்கு மறுபிறவியில் தன் முன் பிறவி முழுவதும் நினைவில் தொடரும் என்பதும், சாதாரணரான நமக்கு இந்தச் சலுகை இல்லை என்பதும்

ஞானிகளைப் பற்றி ஒரு நம்பிக்கை).

சுவர்கத்தின் மூலைகளிலெல்லாம் நண்பரைத் தேடினார். சுவர்கத்தில் உள்ள (records), ஏடுகளைப் புரட்டினார். எங்கேயும் கிடைக்காத காரணத்தினால் மனிதர்கள் உலகிலும் தேடினார். அங்கும் இல்லை. பிறகு பிராணிகள் பறவைகள் உலகிலும் தேடிவிட்டார். அங்கேயும் கிடைக்கவில்லை. கடைசியாக, புழு பூச்சிகள் வாழும் உலகில் தேடும்போது நண்பரைக் கண்டார்.

(இப்படி நாலு இடத்திலும் தேடும் வசதி, ஞானியாக வாழ்ந்து இறந்த பின், சுவர்கத்தில் பிறந்ததனால் கிடைத்த ஒரு சலுகையாக இருக்கவேண்டும்).

தனது நண்பர், மண்ணுலகத்திலேயே ஒரு பெரிய சாணிக் குவியலில்ன்அனை ஒரு புழுவாகப் பிறந்து இருப்பதை உணர்ந்தார்.

தனது சக பிட்சு, தன்னோடு சுவர்கத்தில் இல்லாமல் ஒரு சாணிக் குவியலில் ஒரு புழுவாக பிறந்திருப்பதை நினைத்து துன்புற்றார். எப்படியாவது நண்பனை தன்னோடு விண்ணுலகத்திற்கு அழைத்து செல்லத் துடித்தார். சாணிக்குவியலில் நண்பனை தேடி புகுந்தார்.

சாணியில் பிறந்த புழுவுக்கு நண்பனையோ, முன் ஜென்மத்தை பற்றிய நினைவு சிறிதும் இல்லை. நண்பனுக்கு தன்னை அடையாளம் தெரியவில்லை என்றதால், நண்பருக்கு பழய மடாலைய வாழ்கையை நினைவு படுத்தியும். பயன் கிட்டவில்லை. நண்பருக்கு, சுவர்கத்தில் தான் அனுபவிக்கும் சுகங்களைப் பட்டியல் போட்டார். சாணியில் பிறந்த நண்பருக்கு இதில் எதுவும் மனதை தொட்டதாகத் தெரியவில்லை. பதிலுக்கு, போடா, அறிவு கெட்டவனே! நீயும் உன் சுவர்கமும். இந்த சாணிக்குவியலைவிட மேலான இடம் ஒன்று உண்டா என்று உரக்கச் சிரித்துவிட்டு,

சாணிக்குவியலில் நெளிந்து உள்ளே மறைந்தார்.

முதல் பிட்சுவுக்கு நண்பனை அப்படியே விட்டுவிட மனமில்லை. கபாலென்று புழுவை கையில் பிடித்து பலமாக இழுத்து தன்னுடன் சுவர்கம் எடுத்துச் செல்ல எத்தனிக்க, புழு அதைவிட வேகமாக தன்னை விடுவித்துக் கொண்டு சாணிக்குவியலில் உள்ளே சென்று மறைந்தது. யார் இந்த மடையன் நம்மை விடாது துரத்துகிறானே, என்று அலுத்துக்கொண்டது இந்த சாணியில் மறைந்த புழு.

நாம் அறிந்தவர்களில் இந்த சாணிப் புழுவைப் போல சாணிக் குவியலில் சிக்கியுள்ளார்கள். சாணிக்லிகுவியலேயே ஒரு சுவர்கம் கண்டு, அதிலிருந்து விடுதலை பெற முயலாதவர் எத்தனை பேர்?

சுவர்கத்திலிருந்து வந்த நண்பர் போல, நம்மைக் கரை சேர்க்க, நற்கதி அடையவைக்க எத்தணிக்கும் பெரிய மனம் கொண்ட பல ஞானிகள் என்னும் அந்த நல்லவர்கள் விடாது முயற்சி செய்கிறார்கள்.

அவர்களை புறக்கணித்து தவறான வழியிலேயே நடக்கும் நாம் எல்லோருமே, நாம் கதையில் கண்ட, சாணிப்புழு போன்றவர்கள் இல்லையா?

## 5 . 13 . ஸுபி ஞானிகள்

ஸோபி என்ற கிரேக்க சொல்லில் இருந்து மருவியது இந்த ஸுபி என்று நினைப்பவரில் நானும் ஒருவன். ஸோபி என்றால் அறிவு என்பதாகும். ஸோபிஸ்ட்ஸ் என்று இயக்கம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததாகவும், அவர்களை ஒரு நடமாடும் பல்கலைகழகமாக அறிவார்கள், மக்கள். ஆங்காங்கே சென்று விரும்பும் மக்களுக்கு கல்வி புகட்டுவது இந்த இயக்கத்தின் குறிக்கோள். கிரேக்க அறிஞர் அரிஸ்ட்டாடில் கூட இந்த இயக்கத்தில் ஒரு சமயம் தலைமைப் பதவி வகித்ததாகச்

சரித்திரம் தெரிவிக்கிறது.

தீர்க்கதரசியார் முகம்மதுவும் ஒரு ஸோபி அல்லது ஸுபி என்று கொள்வோர் உண்டு. ஸுபி ஞானிகள் என்று அறியப்பட்டவர்கள், தீர்க்கதரசியார் முகம்மது அவர்கள் வகுத்துத் தந்த இஸ்லாம் என்னும் பக்திப்பாதையில் நடந்து வளர்ந்து, ஆன்மீக உலகவாசிகளாகப் பிரகாசித்த ஞானிகள்.

ஒவ்வொரு ஞானப்பாதையிலும், ஞானிகள் தங்கள் எண்ணங்களை வெளிப்படுத்த ஒரு வழி உண்டு. ஜென்பாதை ஞானிகள் கவிதைக்கும், ஸுபி ஞானிகள் இசைக்கும் பெயர் பெற்றவர்கள். ஒரு முறையேனும் ஸுபி சங்கீத், கேட்டுப் பாருங்கள். நான் அறிந்து, பொருள் விளங்காவிட்டாலும் அதன் இசையில் நாம் மயங்குவது தவறாது.

ஸுப் என்றால் கம்பளி என்று அரேபிய மொழியில் ஒரு பொருள் உண்டென்றும் அறிகிறோம். அந்த நாட்களில் பட்டு மற்றும் விலை உயர்ந்த சொகுசான உடைகளைச் சாதாரண மக்கள் அணியும்போது இந்த ஞானிகள், எளிமையைக் கடைபிடிக்க வேண்டி, முரட்டுக் கம்பளி உடை தரித்தவராதலால் ஸுபி என்ற பெயர் பெற்றதாகக் கொள்பவர்களும் உண்டு.

சுபி என்ற பெயருக்கு இன்னும் பல பொருள்களும், காரணங்களும் உண்டு. ஸோபி என்றால் கிரேக்க மொழியில் அறிவு அல்லது ஞானம். தீர்க்கதரசியாரும் ஒரு சுபி முனிவராக காண்பவர்கள் உண்டு.

எல்லா மதப்பெரியவர்கள் போல, இந்த ஞானிகளின் நோக்கம், தங்களை உண்டாக்கியவனுடன் (இறைவனுடன்) ஒன்றாக கலப்பதே ! ஆன்மீகத்தில் அடிவைத்தவர்கள் எந்த மதப்பாதையில் நடந்து வந்தார்கள் என்பது முக்கியமல்ல. அந்த நிலையில் அனைவரும், அறிவது, அனுபவிப்பது, எல்லாமே ஒன்றுதான்.

**ஞானிகள் எல்லோருமே அனைத்து உயிர்களையும் அணைத்த கருணை** கொண்டவர்கள். மக்களுக்கு அவரவர் வாழ்க்கையில் வலிகள் இல்லாத வழிகளைக் காட்டுவது என்ற குறிக்கோளில் வேறுபட்டவரில்லை.

அத்தியாயம் 6

# (முடிவுறை)

# நாமெல்லாம் ஞானிகளே !

## 6.1. ஹரித்வாரில் ஒரு சாது

சிலவருடங்கள்முன்புஹரித்வார்என்றபுண்ணியதலத்திலிருக்கும் பதாஞ்சலி யோகபீடத்திற்கு செல்லத் தீர்மானித்து மனைவியுடன் பயணமானேன். வந்த வேலை எதிர்பார்த்ததைவிட வேகமாக முடிந்தது.

எனது ஆன்மீக பயணத்தில் நான் வழிகாட்டியாக கொண்டிருந்த (மானசீகர குரு) சுவாமி ராமா வாழ்ந்திருந்த கங்கோத்ரி சென்று வர மனதில் ஒரு உந்துதல்.

இரவு, சுமார் 7 மணி 50 நிமிட அளவில் இந்த எண்ணம் எழ அடுத்தநாள் காலை பஸ்ஸுக்கு டிக்கெட் ரிசர்வ் செய்ய அப்போதே புறப்பட்டோம். அந்த முதன்பதிவு அலுவலகம் மாலை 8 மணிக்கு மூடிவிடும். தங்கியிருந்த ஹோட்டலிலிருந்து ஓட்டமும் நடையுமாக விரைந்தோம். நெரிசலான் சாலை, இந்த ஊரின் ஒரே ஒரு சாலையில். இரவு வெகுநேரம் வரை மக்கள் கூட்டம் வழிந்தோடும்.

இங்கே நான் கண்ட ஒரு சிறப்பு என்னவென்றால். கங்கேக் கரையில் குளிக்கும் இடத்தில் (ஹரி கி பௌடி) பெருவாரியான ஏழை மக்கள், யாசகத்திற்காக மிகவும் அமைதியாகக் காத்திருப்பார்கள். அங்கே கூடும் யாத்திரிகர்கள், தங்களின் செலவில் ஏழைகளுக்கு உணவு வழங்க உதவ, அந்த கங்கேக்

கரையோரம் சில 20 அல்லது 30 உணவு விடுதிகள் உள்ளன.

கடைக்காரர்கள், ரூ 100க்கு சுமார் 10 அல்லது 15 நபர்களுக்கு உணவு தருவோம் என்று கூவி வருவார்கள்.

நம்மிடமிருந்து பணம் பெற்று, நம் கண் முன்னாலேயே, அடுத்தடுத்து அமைதியாக வரிசையில் வரும் ஆண் பெண் முதியோர் சாதுக்கள் என்று பலவகை மக்கள் உணவு பெறுவதைக் காணலாம்.

ஆனால், நான் கவனித்த வரை ஹரித்வாரில் பல வெளிநாட்டு உள்நாட்டு மனிதர்கள் நடமாடியும், நடுரோட்டில் வழிமறிக்கும் யாசகர்கள் கிடையாது என்பது குறிப்பிட தக்கது.

இன்னமும் ஐந்தே நிமிடங்களில் ரிசர்வேஷன் அலுவலகம் மூடிவிடும் என்ற நிலையில், சுமார், 75 வயதுள்ள பெரியவர் ஒருவர் என்னை வழிமறித்தார். தனக்கு ஒரு ஒரு ரொட்டி (எண்ணையிடாத கோதுமைச் சப்பாத்தி) வேண்டுமென்றார். ஒரு ரூ50/- நோட்டை கேயில் பிடித்து, ஐயா, நான் சிறிது அவசரத்திலிருக்கிறேன். எனவே இந்த பணத்தை கொண்டு எவ்வளவு ரொட்டி வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளுங்கள் என்றேன்.

பெரியவர் பணத்தை வாங்க மறுத்துவிட்டார். தான் பணத்தை தொடுவதில்லை என்றார். எனக்கு அவருக்கு கேட்ட ரொட்டியை வாங்கித்தராமல் அங்கிருந்து செல்ல மனமில்லை.

நான் என் குரு வாழ்ந்த இடத்தை அடைவதைவிட இந்த முதியவரின் பசி தீர்ப்பது மிக முக்கியமாக தோன்றியது.

ஒகே, போகலாம் வாருங்கள் என்றேன். பெரியவர் நான் போகவேண்டிய திசைக்கு நேர் எதிரான திசையில் நடந்தார். சில நிமிடங்கள் கழித்து ஒரு சிறிய ஒட்டலில் நுழைந்தார். (அந்த உணவகத்தில் பெரியவருக்கு ஏக வரவேற்பு. அவர் கேட்காமலேயே உணவு தந்து உபசரிப்பார்கள், என்று புரிந்தது)

அங்கே கௌண்டரில் ரூபாய் 50/- ஐ தந்துவிட்டு பஸ் ரிசர்வேஷனுக்கு விரைந்தோம். ஆபீஸ் பூட்டியாகிவிட்டது. இதை இங்கே நிறுத்திவிட்டு முக்கியமான செய்திக்கு வருவோம்.

இந்த பெரியவர் மாத்திரம் இடைபடாமலிருந்தால், பஸ் செல்லும் மலைப்பாதையில் நிலச்சரிவு ஒன்றில் மாட்டிக்கொண்டு, குறைந்தது ஒருநாள் முழுவதும் உணவு உறக்கம் இல்லாமல் மீத (சுமார்) 38 மக்களுடன் சேர்நது அவதிக்கு உள்ளாகி இருப்போம்.

## 6 . 2. கேட்காத கேள்விக்குக் கிடைத்த பதில்.

இது சில வருடங்கள் முன் நிகழ்ந்தது. ஒரு நாள் என் மாணவர் ஒருவர் ஒரு அச்சகத்திற்கு என்னை அவருடைய மோட்டார் சைக்கிளில் அழைத்துச் சென்றார்.

திடீரென்று திட்டமிட்ட பாதையிலிருந்து விலகி, வேறு ஒரு திசையில் சென்றார்.

அந்த நாட்களில் என் மனதில் ஒரு தீவிரமான கேள்வி. அதாவது, ஆன்மீகத்தில் நுழைய ஒவ்வொருவருக்கும் ஒரு காரணம் இருப்பது போலத் தோன்றுகிறது.

மற்ற கல்விகளைப்போல, புத்தகத்தை படித்துவிட்டுத்தான் ஆன்மீகராக மாறவேண்டும் என்பதில்லை. அதுமட்டுமல்லாமல் வேதங்கள், உபனிஷதுக்களைப் படித்த எல்லோரும் ஆன்மீக சாதனையாளர்களாக மாறுவதும் இல்லை.

இதை படிப்பவர் பலர் படிக்க ஒரே ஒரு காரணம், தெரிந்து கொள்வதில் ஒரு ஆர்வம் மட்டுமே. இவர்களுக்கு தாங்கள் படித்ததை எதையும் செயல் படுத்தும் எண்ணம் சிறிதும் இல்லாதவர்கள். (இண்டெலெக்சுவல் க்யூரியாசிட்டி - Intellectual Curiosity- என்பார்கள்).

ஒவ்வொருவரின் ஆன்மிக பயணமும் தனித்தன்மை வாய்ந்தது. அப்படியானால் ஞானிகள் விட்டு செல்லும் கிரந்தங்கள், ஏடுகள், அறிவு விளக்கங்கள் யாருக்காக?

பல நாள் சிந்தனையில் கிடைத்த பதில்கள் எதுவுமே எனக்கு திருப்தி தரவில்லை.

இந்த மாணவர், ஒரு பிள்ளையார் கோவில் முன்னால் தன் வண்டியை நிறுத்தி 86 வயதான ஒரு பெரியவரை அறிமுகம் செய்தார். என்னைத் தனது குருவாக பெரியவருக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

பதிலுக்கு, பெரியவர் நலம் விசாரித்துவிட்டு, ஏதோ நான் கேட்டு பதில் சொல்வது போல, இவ்வாறு கூறினார்.

’கிரந்தங்கள் பலவற்றை சமஸ்கிரதத்திலிருந்து கன்னட மொழியில் மொழிபெயர்ப்பு செய்வது எனது வழக்கம். யாரோ என்னை எதற்காக யாருக்காக செய்கிறாய் என்று கேட்பது போல தோன்றியது’.

நம்மிடையே. இப்படி சிலர் மனிதர்கள் எப்போதும் உண்டு. அவர்கள் ஆன்மிக சாதனைகளில் தன் மனதை ஈடுபடுத்தாமலேயே, அதைப்பற்றி அறிய நாட்டம் கொள்வார்கள். அவர்களுக்காகத் தான் என் போன்ற பலர் எழுதுகிரார்கள் என்று வைத்துக்கொள்ளலாமே என்று முடித்துவிட்டு. ‘நான் இப்போது அவசரமாக போய்க்கொண்டிருக்கிறேன். மீண்டும் ஒருமுறை சந்தித்து விளக்கமாகப் பேசுவோம் என்றார்.

நமது எண்ண அலைகள் மற்றவரை எட்ட நமக்கு தாடியும் தவமும் தேவை இல்லை. இது எனக்கு நிகழ்ந்த எண்ணற்ற அனுபவங்களில், சமீபகாலத்தைச் சேர்ந்தது.

## 6 . 3 ஞானிகள் அறிவதென்ன?

1. நாம், மற்றும் நமது விஞ்ஞானிகளும் உணர்ந்து அறியக்கூடிய

இந்த உலகத்தை பற்றி அறிவதோ, மிக மிக குறைவு. அதிலும் நாம் சிறிதும் உணர முடியாத அண்டத்தை பற்றிய அறிவு அறவே இல்லை என்று சொல்லலாம்.

2. விஞ்ஞானிகள், விரிவடையும் ஒரு அண்டத்தைப் பற்றி பேசுகிறார்கள். மெய்ஞானிகள் கோடான கோடி அண்டங்களை பற்றி சொல்கிறார்கள்.

3. நாம் அறியும் உலகம் போல கோடான கோடி உண்டு. அவைகள் ஒரு பேருயிரின் பல பாகங்களாக இருக்கலாம்.

4. நாம் அறிந்த அணுவுக்குள்ளே உலகங்கள் உண்டு. அண்டங்கள் உண்டு. அணுவை விட சிறிய உலகங்களும், நாம் அறிந்த அண்டங்களை விட கோடானு கோடி பங்கு பெரியதான உலகங்களும் இருக்கலாம்.

5. நமது வாழ்க்கே நமக்காக இல்லை என்பது ஒரு உண்மை. குறுகிய நோக்கில் நாம் நமது திட்டப்படி வாழலாம். விரிந்த நோக்கில், நமது வாழ்வு பேருயிரின் விருப்பத்திற்காக நடைபெறுவது மாத்திரமே உண்மை !

6. நாம் நினைத்தும் பார்க்க முடியாத அகில அண்டத்தைப் பற்றிய அறிவும். பிறப்பின் ரகசியங்களையும் அறிந்தவர்கள்.

## 6 . 4 ஒரு ஜென் கவிதை

ஆன்மீகப் பெரியவர்கள் ஆன்மீகப்பயணத்தில் பிரம்மனைக் கண்டு கேகுலுக்கியதும் என்ன செய்கிறார்கள்?

இதற்கான பதில் கீழே காணும் ஒரு ஜென் கவிதையில் புதைந்திருக்கிறது, .

ஜென் கற்பதற்கு முன்னால் மலைகள் மலைகளாக இருந்தன, ஆறுகள் ஆறுகளாக இருந்தன.

ஜென் கற்கும்போது, மலைகள் மலைகளாக இல்லை, ஆறுகள்

ஆறுகளாக இல்லை.

ஜென் கற்பின், மலைகள் மலைகளாக இருந்தன, ஆறுகள் ஆறுகளாக இருந்தன.

இந்தக் கவிதை, ஜென் புத்தமத ஞானிகளால் உருவாக்கப்பட்டது. மற்ற புத்தமதக் கதைகளைப் போலவே, ரத்தினச் சுருக்கமானது. அதனால் தான் என்னவோ படிப்பவருக்கு உடனே இதுதான் பொருள் என்று புரிவதில் தடங்கல் உண்டாகும். கீழே காணும் (நான் தரும்) விளக்கத்தை படித்தபின் மீண்டும் ஒருமுறை, ஜென் கவிதையைப் படியுங்கள்.

நாமெல்லாம் பொருள் உலக வாசிகள். பிறந்து வளரும்போது ஆறு, மலை என்றும் பல பொருள்களை பார்த்தும், கேட்டும் உணர்ந்தும், பலர் சொல்லியும் அறிகிறோம்.

இந்த அறிதலினால், இந்த உலகே, நம்மை, அதோடு, நமது வாழும் வகையை, வாழ்க்கேயை - பொருள்பாதையை - நாம் நன்றாக அறிந்ததாக உணர்கிறோம். அதோடு வாழ்க்கேயில் அடையவேண்டிய பல இலக்குகளை நாம் தீர்மானிக்கிறோம்.

வாழ்க்கேயின் முதல் கட்டத்தில் நாம் காணும் அனைத்தும் உண்மையாகவே தெரிகிறது. அதாவது, மலைகள் எல்லாமே மலைகளாகவே தெரிகிறது, ஆறுகள் அனைத்தும் ஆறுகளாகவே தெரிகிறது.

நம்மில் பலர் பல இலக்குகளை தீர்மானித்தாலும் சில இலக்குகளை அடைகிறோம். இந்த சிறிய வெற்றிகளால் நமக்கு இந்த உலகத்தைப் பற்றி எல்லாமே தெரிந்துவிட்டதாகவே உணர்கிறோம்.

பல இலக்குகளை நாம் அடைவதில்லை. அடையமுடியாத இலக்குகள் சிலரை மட்டும், அதுவும் சில நேரங்களே வாட்டுகின்றன.

பலர் இதை மறந்து மீண்டும் தனது முயற்சிகளை தொடர்கிறார்கள். சிலர் இறை வழிபாடு, தர்ம சிந்தனைகள் சமுதாய நலன் என்ற நல்ல எண்ணங்களோடு பொருள் பாதையில் செல்கேயில், தோல்விகளின் வலிகளை உணர்வதில்லை.

வேறு சிலரோ அவசியமோ இல்லையோ, வயதானவர் கேத்தடியுடன் செல்வதைப்போல பொருளுலகத்தில் முழுநேரமும் கடவுளை, மனதில் இருத்தியே செல்வார்கள். இந்த வகையில் பலருக்கு ஜென்னோ அல்லது எந்தவித ஆன்மீக பாதையோ அவசியம் இல்லை. இவர்கள் பெரும்பான்மையானவர்கள்.

ஆனால் சிலரை சில தோல்விகள் மீள முடியாத துக்கத்தில் தள்ளுகின்றன. இவர்கள், தாங்கள் அறிவதெல்லாம் உண்மையல்ல என்ற எண்ணத்தை அடைகிறார்கள். ( பாரதியார் பாடியபடி இவை எல்லாமே காட்சிப் பிழைகளோ!)

காண்பதெல்லாம், ஒரு மாயையே, ஆறுகள் ஆறுகளல்ல, மலைகள் மலைகளல்ல என்ற முடிவுக்கு வருகிறார்கள். இந்த முடிவு இவர்களை இவைகள் உண்மை இல்லை என்றால், மாயை என்றால், உண்மை என்ன என்ற தேடலில் மாட்டுகிறார்கள்..

அப்போது, ஜென், உபநிஷத், யோகா, தியானம்மனம் ஆகியவற்றில் அந்த மக்களின் மனம் செல்கிறது. இதுவே இரண்டவது கட்டம்.

வெகு சிலர், பயணத்தின் இறுதியை அடைகிறார்கள். இவர்கள் அறிய வேண்டிய உண்மைகளை முழுவதும் அறிந்தவர்கள். படைப்பின் ரகசியத்தை அறிந்துவிட்டார்கள். உலகத்தில் எந்த நிகழ்வும் இவர்களை துன்புறுத்துவது இல்லை.

ஆனால் இதை உணராத உயிர்கள் அனைத்தும் துன்புறுவதையும் கண்டு துயரம் கொள்கிறார்கள். அன்புடனும் அனுதாபத்துடன் இவர்களைக் கண்டு உதவும் சில உயர்ந்த உள்ளங்கள் உண்டு.

வள்ளலாரின், அணையாது அடுப்பு (மூடாத அடுக்களை),

ஸ்வாமி ராமாவின் மருத்துவமனை ஆகியவை இன்றும்நாம் கண்டு உணரக்கூடியவை.

(நாம் அவற்றை கண்டுக்காமல், இந்த மகான்களை பொருளுலக பிரச்சனைகளுக்கு உதவி கேட்பதோடு நிறுத்திக்கொள்வது, எவ்வளவு அறிவீனம்?).

## ஆன்மீகப் பயணிகளின் மூன்றாவது கட்டம் இது.

இவர்கள் ஆறுகளை ஆறுகளாகவே அறிகிறார்கள். அதேபோல மலைகளும் இவர்களுக்கு மலைகளாகவே தெரிகிறது. அப்படியானால், முதல் கட்ட மக்களுக்கும், மூன்றாவது கட்ட மக்களுக்கும் வித்தியாசம் இல்லையா? உண்டு!

ஞானிகளின் அறிவு, தங்களை மாயையின் பிடியிலிருந்து தப்பி, விரும்பியபடி வாழ அனுமதிக்கிறது. வாழும் காலத்தில் அவர்களை, துன்பங்களும் துயரங்களும் துரத்துவதில்லை.

## 6.5 ஞானிகளும் அறிவும்.

வட மொழியில் ஞானி என்றாலே அறிவு உள்ளவர் என்ற பொருள். எல்லோருமே ஞானியாகிவிட்டால் இயற்கே தரும் இன்னல்களில், வறுமையில், கடும் நோய்களில் மக்கள் துன்பம் அடைய மாட்டார்கள் இல்லையா? அதனால் மனிதர்கள் அனைவரையும் ஞானிகளாக்கிவிட முடியாதா என்றுசில நல்ல எண்ணங்கள் கொண்ட என் நண்பர்கள் என்னைக் கேட்பதுண்டு.

என் பதில்: செய்ய இயலாதது என்றல்ல. ஆனால் அதன் பின், பொருட் பாதையில் செல்ல மனிதர்கள் யாருமே இருக்க மாட்டார்கள். அது நம்மைப் படைத்தவனுக்குப் பிடிக்காது. மேலும் விவரம் சிறிது சிக்கலானது. எனவே, இவற்றை ஓட்டங்கள் என்ற அடுத்த புத்தகத்தில் படிக்கலாமே?

இப்போது ஞானியாக அறிவு தேடும் படலத்திற்கு வருவோம்.

ஞானியாக அறிவு வேண்டும். அதுவும் சாதாரண அறிவு இல்லை. இரண்டாம் மூன்றாம் வகை அறிவு.

அது என்ன?

## (1) தெரிந்தது (2) தெரிந்து கொள்ள முடியும் என்ற வகை (3) தெரிந்து கொள்ள முடியாதென்ற வகை.

(1) முதல் வகையான தெரிந்தது என்றவகை அறிவின் ஒரு பகுதியை நாம் நமது அறியும் பொரிகளினால் பிறர் உதவியின்றி அடையலாம். மேலும் ஒரு பகுதியை வேறு ஒருவர் சுட்டிக்காட்டி விளக்கினால் நம்மால் அறிந்து கொள்ள முடியும். இது கடினம் இல்லை. இந்த வகை அறிவை, நம்மைப் போன்ற சாதாரண மக்கள், ஞானிகள், விஞ்ஞானிகள் ஆகிய அனைவரும் எளிதாக அடையலாம்.

(2) தெரிந்து கொள்ள முடியும் என்ற வகை அறிவு. இது சாதாரண மக்கள் சம்பந்தப்படாதது. பொரிகளுக்கு அப்பார்ப்பட்ட அறிவுகள் என்ற வகை. உதாரணமாக, மிகச் சிறிய உயிர்களை மைக்ராஸ்கோப் மூலம் காணலாம். கோடிக்கணக்கான மைல் தூரத்தில் உள்ள கிரகங்களைக் காண்பது, அணுவைத் துளைத்து அணு சக்திகளை பயன் படுத்துவது என்று எண்ணற்ற அறிவு பொருந்தியவை அண்டத்தில் உண்டு. இது விஞ்ஞானிகள் மற்றும் ஆராய்ச்சியாளர்கள் உருவாக்கிய வகை வகையான உபகரணங்களின் உதவியால் மட்டுமே அறிய உதவும். ஞானிகள் மற்றும் விஞ்ஞானிகள் என்ற இருதர மக்களும் பயணம் செய்யும் இடம்.

(3) மூன்றாம் வகை அறிவு. சாதாரண மக்கள் என்றும் அறிந்து கொள்ள முடியாது என்ற வகையிலானது. இது ஞானிகள் மாத்திரம் பயணம் செய்யும் இடம்.

மனிதன் ஞானியாக மாறுவதற்குத் தேவையான அறிவை,

அதாவது மூன்றாம் வகை அறிவை எப்படி அடைகிறான்? இதை இரண்டு விதமாக விளக்கலாம். முதல் விதத்தை இப்பொழுது படிக்கலாம்.

## (1) ஒரு உடலுக்குள்ளே பல மனிதர்கள்

மனிதன் என்பவன் ஒரு உடலாக தெரிந்தாலும், அவனுள்ளே எண்ணற்ற மனிதர்கள் உண்டு. உதாரணமாக, ஒரு பாடகன் (சிலருக்கு குளியறையில், வெளியே வருவான்) ஒரு திருடன் (பிறர் அறியாமல் நமக்கு சொந்தமில்லாததை கேயகப் படுத்துகிறோம்), ஒரு கொள்ளைக்காரன் (அதிக விலைக்கு விற்கும் வியாபாரி கூட ஒரு கொள்ளைக்காரன் தான்). ஒருகொலைகாரன் (கொசுவை அடித்துக் கொல்லும் போது) தியாகி (பஸ்ஸில் ஒரு முதியவருக்கு தன் இருக்கேயைத் தந்து உதவும்போது), ஒரு வள்ளல் (ஒரு ஏழைக்கு மனம் இரங்கி தானம் செய்யும்போது). ஒரு ஆசிரியர் ( ஒருவருடன் தான் அறிந்ததை பகிர்ந்து கொள்ளும் போது). ஒரு மாணவன் (படிக்கும் பொழுது அல்லது பிறர் விவரிக்க, அப்பொழுது கவனத்துடன் கேட்கும் பொழுது).

இப்படிப்பட்ட மனிதர்கள் அவ்வப்போது தேவைக்கும் சூழ்நிலக்கும் ஏற்றவாறு உடலிலிருந்து வெளிவந்து செயல்பட்டுத் திரும்புவது நாம் அறிந்ததே.

இவற்றின் உள்ளே, பலரையும் கடந்து செல்லும்போது, கடைசியாக ஞானியைக் காணலாம். மேலே குறிப்பிட்ட பலவித மனிதர்கள் புலன்களுக்கு, உணரும் கருவிகளுக்கு அடிமையாக வாழ்கிறார்கள். இந்த அடிமைகள், இடத்தைக் காலி செய்ய வைத்தால் ஞானி மத்திரமே காணப்படுவார்.

இந்த நிலையில் ஒரு மனிதன் ஒரு ஞானியாகப் பிரகாசிப்பான்.

(2) மண்ணில் காலூன்றிய புதிய பிறவியுடன் வருவது, ஒரே ஒரு இயல்பு, அதாவது ஞானியின் இயல்பு. புதிய மனிதனை, பல உறவுகளும், உற்றவரும் மற்றவரும் சூழ்ந்துள்ளார்கள்.

இவர்கள், இடைவெளியே இல்லாமல் தாங்கள் அறிந்த தவறான அறிவை புகட்டுகிறார்கள். இப்படியாகத் ஒவ்வொரு தவறான அறிவுடனும் ஒரு புதிய மனித இயல்பு மனிதனுடன் சேருகிறது.

ஒரு கட்டத்தில் ஞானியின் இயல்பு இருக்கும் இடம் தெரியாத அளவிற்கு பல வித தீய, செய் இயல்புகள் மற்றும் செயலற்றவர்கள் மனிதனுடன் சேருகிறார்கள்.

மனிதன், நல்லறிவை அடைவதன் மூலம் தவறான அறிவு ஒவ்வொன்றும் வெளியேறுகிறது. பிரிந்து செல்லும் தவறான அறிவு, அதோடு இணைந்த இயல்புகளையும் தன்னுடன் கொண்டு செல்கிறது. கடைசியில் எஞ்சுவது, ஞானியின் இயல்பு மட்டுமே.

வாசகர்களே,

**இப்பொழுது உங்கள் ஆன்மிகப் பயணம் தொடங்கட்டும்.**

**நடராஜன்.**

